அடுத்த இதழ் :

# சினிமா சிறப்பிதழ்




















ரூ. **1500/-** பரிசு பெறும் முதல் பரிசுச் சிறுகதை

100 பக்கங்கள்; ஏராள வண்ணங்கள்; அதே விலை!

# குவைத் கனவு நிறைவேற...

குவைத் போய் ஏராளமாகச் சம்பாதித்து, தாராளமாகச் செலவழித்து வாழ்க்கை நடத்தலாம் என்று ஈஸ்ட்மென் கலர் கனவுகளில் மிதப்போர் கொஞ்சம் நிற்க வேண்டும்! இந்த குவைத் கைடைப் படித்து, கிழித்து(?) வைத்துக் கொண்டால் கனவு கைகூடும் தருணத்தில் பேருதவியாய் இருக்கும்.

குவைத் செல்ல இருவித



விசாக்கள் : விசிட் விசா - ஒரு மாதத்துக்கு. அதற்கு மேல் தங்கினால் நாளொன்றுக்கு பத்து தினார் அபராதம்!

மற்றது வொர்க் விசா. வேலைக்கான உத்தரவு (work permit) கிடைத்ததும் அதை குவைத் தூதரகத்தில் (பம்பாய் டெல்லியில் மட்டுமே உண்டு) காட்டி, வொர்க் விசா பெறலாம். ஆனால் அதற்கு முன் சில பல படிகளைத் தாண்டியாகணும்.

- வொர்க் பெர்மிட் கையில் கிடைத்தவுடன் Police Clearance Certificate என்ற சான்றிதழ் வாங்க வேண்டும். இதற்கு போலீஸ் ஸ்டேஷனெல்லாம் போகத் தேவையில்லை. பாஸ்போர்ட் அலுவலகத்திலேயே தருவார்கள். மூன்று வாரங்கள் வரை ஆகலாம்.
- ECNR (Emigration Clearance Not Required) என்ற முத்திரையை பாஸ் போர்டில் வாங்க வேண்டும். இதற்கு பாஸ் போர்ட் ஆபீஸில் மனு செய்ய வேண்டும். பட்டதாரி எனில், பாஸ்போர்ட் வழங்கும் போதே ECNR முத்திரை குத்தியிருப்பார்கள். பிற்பாடு பட்டம் வாங்கியிருந்தால் அதனைக் காட்டி முத்திரை பெறலாம். பட்டதாரி அல்லாதோர் வொர்க் பெர்மிட்டைக் காண் பித்து முத்திரை வாங்கலாம்.

வொர்க் பெர்மிட், பி.சி.சி, ஈ.சி. என்.ஆர். சகிதம் தூதரகம் சென்றால் மருத்துவப் பரிசோதனைக்கு அனுப்புவார்கள். அவர்கள் அங்கீகரித்துள்ள இடத்தில்தான் பரிசோதனை செய்து கொள்ளலாம். மருத்துவச் சான்றிதழ் நேராகத் தூதரகம் போய் விடும். நம் கைக்கு வராது!

விசா விண்ணப்பம் பூர்த்தி செய்து,

## ஏமாறாதீர்கள்... எச்சரிக்கை!

***கம்பெனிகள் மூலம் அரபுநாடுகளுக்குப் நேராய் வேலை வாய்ப்புப் பெறுபவர்களுக்குப் பிரச்னையில்லை. நகை நட்டையெல்லாம் விற்றுவிட்டு, ஏஜண்ட்டுகள், கான்ட்ராக்ட்கள், சப்-கான்ட்ராக்ட்டுகள் மூலம் வருபவர்கள் கவனத்திற்குச் சில எச்சரிக்கைக் குறிப்புகள்:***

கம்பெனியிலிருந்து நேரடி இண்டர்வியூ என்றால் பேப்பர் விளம்பரம் வந்து, அப்ளை பண்ணுபவர்களுக்குக் கடிதம் அனுப்பி, தேர்வானால் அவர்களே எல்லாச் செலவுகளையும் ஏற்றுக் கொள்வர்.

இது தவிர சில ஏஜெண்ட்டுகள் பம் பாயில் படிக்காத அப்பாவிகளை லேபர் மற்றும் சாதாரண வேலை களுக்னெ 60, 70 ஆயிரம் பணம் கொண்டு வரச் சொல்லி அலைகழித்துக் கடைசியில் வேலையும்

- என். சி. மோகன்தாஸ்



## சலாம் அலய்க்கும்!

குவைத் சிறப்பிதழுக்கான செய்திகளையும் புகைப்படங்களையும் பலரிடமிருந்தும் சேகரித்துத் தொகுத்து அனுப்பிய என். சி. மோகன்தாஸ் அவர்களுக்கும் அவருக்கு உதவிய திருவாளர்கள் மணி, செந்தமிழ் அரசு, சுப்பராமன் இளமாறன், சுதர்ஸன் ஆகியோருக்கும் மற்றும் ஒத்துழைப்புத் தந்த குவைத் பாரதி கலை மன்றத்தினருக்கும் சுக்ரன்!

- ஆசிரியர்

பாஸ்போர்ட் மற்றும் குவைத் செல்வதற்கான open ticket (தேதி குறிப்பிடாத விமான டிக்கெட்) ஆகியவற்றுடன் மீண்டும் தூதரகத்துக்குப் படையெடுக்க வேண்டும். இதற்கிடையே உங்கள் மெடிகல் ரிப்போர்ட் பார்த்திருப்பார்கள். அது அவர்களுக்குத் திருப்தி அளித்தால் பத்தாயிரம் ரூபாய் கட்டணம் உங்களிடம் பெற்றுக் கொண்டு, பாஸ் போர்ட்டையும் வாங்கி வைத்துக் கொள் வார்கள்.

அவர்கள் குறிப்பிடும் நாளில் மீண்டும் தூதரகம் போய் பாஸ்போர்டை வாங்கிக் கொள்ள வேண்டும். அதில் குவைத்துக்குள் அனுமதி (Entry Visa) முத்திரை இருக்கும். இனி டிக்கெட் தேதியை உறுதி செய்து கொண்டு விமானம் ஏறலாம். ஞாபகமாக உங்கள் பாஸ்போர்ட் சைஸ் புகைப்படத்தில் இரண்டு டஜன் பிரதிகள் எடுத்துச் செல்லுங்கள். குவைத்தில் கால் வைத்து விட்டால் எடுத்ததற்கெல்லாம் போட்டோ கேட்பார்கள்! அங்கேயே எடுக்கலாம்தான், ஆனால் காஸ்ட்லி!

'அப்பாடா!' என்று குவைத்தில் போய் வேலையை ஆரம்பித்து விட முடியாது. அங்கு ஒரு வருடமோ இரண்டு வருடமோ தங்குவதற்கு Resident Visa வாங்கியாக வேண்டும். இதை வாங்கித் தருவது நமக்கு வேலை கொடுத்தவர்களின் வேலைதான் என்றாலும் நாம் மீண்டும் மருத்துவப் பரிசோதனைக்குப் போயாக வேண்டும். இதை அரசாங்க மருத்துவமனையில் மட்டுமே செய்து கொள்ளலாம். இதில் ஏதேனும் பெரிய குறை அல்லது வியாதி தென்பட்டால் உடனே மூட்டை கட்டி ஊருக்கு அனுப்பி விடுவார்கள்.

தவிர, குவைத்தில் நுழைந்ததுமே நம் கை ரேகையைப் பதிவு செய்து விடுவார்கள். அப் பதிவின் பிரதியும் தருவார்கள். இந்தப் பிரதியுடன் குவைத் மமனை சான்றிதழும் தந்துதான், ஒன்று அல்லது இரண்டு வருடம் தங்குவதற்கான அனுமதி முத்திரையை பாஸ்போர்டில் பெற முடியும். இந்த Resident Visa வை இரண்டு மாதங்களுக்குள் பெறா விட்டால் நாளொன்றுக்கு இரண்டு தினார் அபராதம்!

மாமூல் கொடுத்துச் சமாளித்துக் கொள்ளலாம் என்று பழக்க தோஷத்தில் நினைத்தோமானால் ஃபுட்பால் ஆடி விடுவார்கள்!

— பி. இளமாறன்

வேண்டாம் பணமும் வேண்டாம் - ஆளை விட்டால் போதும் என்று ஓட வைப்பதும் உண்டு. எச்சரிக்கை அவசியம்.

இன்னொரு வகை - காண்ட்ராக்டர்கள், கல்ஃபில் பெரிய பெரிய கம்பெனிகளில் காண்ட்ராக்ட் எடுத்து ஆட்களை சப்-காண்ட்ராக்டில் தேர்வு செய்வர். இவர்களிடம் சற்று எச்சரிக்கை தேவை.

இந்தியாவில் இண்டர்வியூவின் போது ஒரு சம்பளம் சொல்வர். வந்தால் அதில் பாதியாக இருக்கும். கேட்டால், "இஷ்டமிருந்தால் வேலை செய். இல்லாவிட்டால் உன் செலவில் டிக்கெட் எடுத்து ஓடிப் போ" என்பர். இதுபோன்றவர்களிடம் பாம்பே இண்டர்வியூவோடு முடிந்தது என நினைத்து விடாதீர்கள். இங்கு வந்ததும் இன்னொரு இண்டர்வியூ உண்டு. அதில் தோற்றாலும் - வேலை கிடையாது. ஊருக்குத் திரும்பி விட வேண்டியதுதான்.

அடுத்து, சாப்பாடும், தங்கும் வசதியும் நாங்களே செய்து தருகிறோம் என்று சொல்லி, இங்கு வந்து ஒரே ரூமில் 10, 15 பேர்களை அடைத்து வைப்பர். ஆகையால் காண்ட்ராக்ட் கம்பெனி மூலம் வேலை பெறுபவர்கள், இண்டர்வியூவிலேயே, சம்பளம் எவ்வளவு, டிக்கெட் யார் செலவு, வேலை எப்படி, எத்தனை வருட காண்ட்ராக்ட், லீவ் எத்தனை நாள், கல்ஃபில் போய் மீண்டும் இண்டர்வியூ உண்டா, சாப்பாடு, தங்கும் வசதிகள் எப்படி எனத் தெளிவாய் கேட்டுக் கொள்ள வேண்டும்.

"ஆல் தி பெஸ்ட்!"

— "குஞ்சு"



# தலைவிகளின் ராஜ்ஜியத்தி

**குவைத் வாழ்க்கை எப்படி இருக்கிறது? குவைத்திலுள்ள இந்திய குடும்பத் தலைவிகள் சிலரைச் சந்திக்க வைத்துக் கலந்துரையாடல் ஒன்று நடத்தினோம். குவைத் வாழ்க்கையைச் சந்தோஷமாக விரும்புகிற அணியாகவும் 'என்னதான் இருந்தாலும் நம்மூரைப் போலாகுமா?' என்று அலுத்துக் கொள்கிற அணியாகவும் பிரிந்து ஒரு பட்டிமன்றமே நடத்தி விட்டார்கள். அவர்களுடைய கலந்துரையாடலை நாமும் இங்கே அணி வாரியாகத் தொகுத்தளித்திருக்கிறோம்...**

## குவைத் வாழ்க்கை சந்தோஷ வாழ்க்கையே...

*(சொல்பவர்கள் : அமுதா புகழேந்தி, பிரேமா சுப்புராமன், உஷா கௌசிக், கீதா அரவிந்த், சரஸ்வதி ராமசாமி, கருணா இளமாறன், சாந்தி ராஜசேகர், மாலா பாலு)*

இங்கே குடும்பம் நடத்த எந்தக் குறையுமில்லை. வாழ்க்கை ரொம்பவும் எளிதாயிருக்கிறது. எல்லாமே எளிதாய்க் கிடைக்கின்றன. நம்மூர் போல, பால், தண்ணீர், கரண்ட், சமையல்காஸ், ரேஷன் என்று எல்லாவற்றிற்கும் அலைய வேண்டியதில்லை! ஒரு போன் பண்ணினால் போதும்; எல்லாமே வீட்டிற்கு வந்து சேர்ந்து விடுகின்றன. காய்கறிகள் தினசரி விமானத்தில் வந்து இறங்குகின்றன. நம்மூரில் கிடைக்கின்ற அத்தனை பொருட்களும் இங்கே கிடைக்கின்றன.

சாதி-மத-மொழி வேறுபாடில்லாமல் எல்லோரும் பழகுகிறார்கள். சுதந்திரமிருக்கிறது. சுதந்திரமாய்ச் செயல்பட முடிகிறது. மாமனார் - மாமியார் கொடுமையில்லை. கிளைமேட் மோசம் என்றாலும் கூட வீடுகளில் ஏஸி! குளிர்நாட்களில் ஹீட்டர்!

நம்மூர் தீபாவளி, பொங்கல், நவராத்திரி மற்றும் அனைத்து விசேஷங்களை இங்கும் கொண்டாடுகிறோம். இங்கேயே பிரசவம் என்றால் தோழிகள் எல்லோரும் சேர்ந்து (ஊரில் இல்லாத கவலை தெரியாமலிருக்க வேண்டி) வளைகாப்புக் கூட நடத்துகிறோம்.

குழந்தைகளின் படிப்பு பற்றின கவலையில்லை. அவர்கள் நேர்மையாயும் உண்மையாயும் வளருகிறார்கள். அவர்களுக்காக எவ்வளவோ பொழுதுபோக்கு அம்சங்கள் உள்ளன.

அமெரிக்கா மற்றும் பிறநாடுகளில் செட்டிலாகிற இந்தியர்களுக்கும் நம்மைப்



# வாழ்க்கை எப்படி?

போல் வளைகுடா நாடுகளில் உள்ள குடும்பங்களுக்கும் எவ்வளவோ வித்தியாசங்கள் உண்டு. அங்கே உள்ளவர்கள் அங்கேயே இடம் வாங்கி- செட்டிலாவதால் நம்மூர் கலாசாரத்தை மறந்து, மாறி விடுகிறார்கள். ஆனால் நாம் அப்படியில்லை. பிற நாட்டினர் இங்கு ஓர் அங்குல இடம் கூட வாங்க முடியாது. சம்பாதிக்கலாம். அதை இங்கே முதலீடு செய்ய முடியாது. அதனால் - இங்குள்ள வாழ்க்கை நிரந்தரமில்லை என்பதால்- நாம் எப்போதும் நாமாகவே இருக்கிறோம். நம் பண்பாடு, ஒழுக்கம் இவற்றிலிருந்து துளியும் பிசகாமல் வாழ்கிறோம்.

இன்னொரு முக்கிய விஷயம்- இங்குள்ள பாதுகாப்பு. நம்மூரில் கொலை - கொள்ளை - கற்பழிப்பிற்குப் பஞ்சமில்லை. வீட்டை விட்டு இறங்கினால் உருப்படியாய்த் திரும்புவோமா என்பதற்கு உத்திரவாதமில்லை. எப்போது கடையடைப்பு! எப்போது ஊர்வலம்! எப்போது ஸ்டிரைக்! எப்போது கரண்ட் போகும்! என்று நம் நாட்டில் படுகிற அவஸ்தை இங்கில்லை.

பெண்களுக்கெல்லாம் நகை மேல் ஆசை உண்டு. ஆசை ஆசையாய் வாங்கியும் வைப்பார்கள். ஆனால் அதைப் போட்டுக் கொண்டு வெளியே போய் வருகிற சூழ்நிலை நம்மூரில் இருக்கிறதா? இங்கு எவ்வளவு நகை வேண்டுமானாலும் போட்டுக் கொண்டு எந்த நேரத்திலும் வெளியே போய் வரலாம். அத்தனை பாதுகாப்பு!

இது தவிர, இலவச மருத்துவம், முதல் தரமான மளிகை மற்றும் உணவுப் பொருட்கள்! வேறு எந்தவித தலைவலியும் பிரச்னைகளும் இல்லாததால் கணவன், - குழந்தைகள் என்று அவர்களுடன் அதிக நேரம் செலவிட முடிகிறது. சந்தோஷ வாழ்க்கைக்கு இதைவிட வேறு என்ன வேண்டும்?

## நம்ம ஊர் நம்ம ஊர்தான்!

*(வாதிடுபவர்கள் : கீதா தட்சிணாமூர்த்தி, கலா வரதராஜன், ஜோதி சாக்ரடீஸ், ஜெயந்தி ஸ்ரீதர், ரமாமூர்த்து கிருஷ்ணன், லதா ராஜேந்திரன், ஹரிப்ரியா சுதர்ஸன், விசாலம் மணி, அனந்த லக்ஷ்மி ரெங்கசாமி):*

இங்கே எல்லாம் எளிதாய்க் கிடைக்கிறது என்பதை மறுப்பதற்கில்லை. ஆனால் இவையெல்லாம் நிரந்தரமா? நாம் என்றைக்கிருந்தாலும் நம்மூருக்குப் போக வேண்டியவர்கள்தானே! இங்கு கிடைக்கிறதே என்று தாற்காலிகமாய் அனுபவித்து விட்டு, ஊருக்குப் போனால் அங்கே செட்டிலாகச் சிரமப்பட வேண்டியுள்ளது. ஒன்றிப் போக முடிவதில்லை.

பள்ளிகளில் கல்வித்தரம் நிச்சயமாய்ப் போதாது. எளிதாகக் கல்வி கிடைப்பதால் குழந்தைகளும் படிப்பதில்லை. வாழ்க்கையை எளிதாய் அனுபவிப்பதால், போராடி ஜெயிக்கும் பக்குவம் இங்கு வளரும் குழந்தைகளுக்கு இருப்பதில்லை. படிப்பிலும் கூட போட்டி இல்லை. பொழுதுபோக்கு இடங்களைத் தவிர, மற்ற இடங்களில் குழந்தைகளால் இங்கே சுதந்திரமாக விளையாட முடியுமா?

வெளியே நகை போட்டுக் கொண்டு உலாவலாம் - சரி. ஆனால் யார் தனியாய்ப்

போக முடிகிறது? நம் விருப்பப்படி அடுத்தவர்களின் வீடுகளுக்கு உடனடியாகப் போக முடிகிறதா? விரிந்து பரந்த ஏரியாவில் காரில்லாமல் எதுவுமே செய்ய முடிவதில்லையே!

பணம் வருகிறது - ஆனால் நம் உறவுகள், திருமணங்கள், விசேஷங்கள் எதிலும் கலந்து கொள்ள முடியாதது எவ்வளவு பெரிய இழப்பு? நெருங்கியவர்கள் தவறி விட்டார்கள் என்றால் உரிய நேரத்தில் போய் அவர்களின் முகத்தைக் கடைசியாய்ப் பார்க்கும் வாய்ப்பாவது நமக்கு இருக்கிறதா? அது எத்தனை பெரிய கொடுமை!

தவிர, நம்மூரில் மனசாந்திக்காகக் கோவிலுக்குப் போவோம். இங்கே நமக்கு அது பெரிய இழப்பில்லையா?

நம்மூர் மண்ணில் கால் பதித்தாலே தனி சுகம்தான். அங்கு கிடைக்கிற நிம்மதியும் திருப்தியும், மனநிறைவும் நிச்சயமாய் இங்கு இல்லை.

நாம் இங்கே சம்பாதிக்கத்தான் வந்திருக்கிறோம். பணமிருந்தாலும் கூட எதிர்காலத்தை எண்ணுவதால் யாரும் ஊதாரியாய்ச் செலவு பண்ணுவதில்லை. எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாய்ச் சேமிக்க முடியுமோ அந்த அளவிற்குச் சேமிப்பிலேயேதான் குறியாக இருக்கிறோம். ஆனால் ஊரில் இருப்பவர்கள் என்ன நினைக்கிறார்கள்? அவர்களுக்கு என்ன குறைச்சல்? பணம் அனுப்பக் கூடாதா? பொருட்கள் - நகைகள் வாங்கி வரக் கூடாதா என்கிற பொல்லாப்பு! பழிச்சொல்! இவையெல்லாம் நமக்குத் தேவைதானா?

தொகுப்பு : **ரக்ஷாமணி, பிரேமா சுப்புராமன்**



**சாலை ரேடார்கள்!**

இவைத் சாலைகள் அபாரமானவை. பிரதான சாலைகளில் நான்கு டிராக்குகள் உண்டு. 80 கி.மீ., 120 கி.மீ., 140 கி.மீ. என வேகத்திற்கு ஏற்றபடி இவை பிரிக்கப்பட்டுள்ளன. சாலைகளில் போலீஸ் தென்படவில்லையே என்று எவரும் டிராஃபிக் ரூல்களை மீறுவதில்லை. மீறவும் முடியாது. பிரதான சாலைகளில் ரேடார் பொருத்தப்பட்டு, அவை, எப்போதும் படம் பிடித்து கன்ட்ரோல் ரூமில் பதிவு செய்து கொண்டேயிருக்கும். மீறுபவர்களுக்குத் தயவு தாட்சண்யமில்லாமல் அபராதம் அல்லது சிறை! மூன்று முறை தவறு செய்தால் லைசென்ஸ் பறிபோகும்.

இங்குள்ள அதிக வெயில் மற்றும் அதிக குளிர் காரணமாய் இரண்டு சக்கர வாகனங்களை எவரும் பயன்படுத்துவதில்லை. அதனால் எங்கு நோக்கினும் கார்கள்!

- **சுப்புராமன்**

# Kalki Shopping Page

## வேலை வாய்ப்பு



- நீங்களும் ஓவிய ஆசிரியர் ஆகலாம்.
- கொஞ்சம் ஆர்வம் கொஞ்சம் முயற்சி போதும்.
- அற்புதமான அஞ்சல் வழிப் பயிற்சி.
- நேர்த்தியான நேர்முகப் பயிற்சி.
- கல்வித் தகுதி S.S.L.C, +2 தேர்ச்சி.
- ஒளிமயமான எதிர்காலம்.
- உன்னதமான வேலை வாய்ப்பு.
- விவரப் புத்தகம் இலவசம் விண்ணப்பிக்கவும்

**Ajantha School of Arts**
(Govt. Regd. No: 1075/89/MS/RD)
67, Anjaneyar Koil Street,
Poonamallee,
MADRAS-600 056.

MAXIMA - A unique Group of Companies



FOR HIGHEST INTEREST

and

HIGHEST SAFETY

FOR SPECIAL OFFER

See Page No. 9

Maxima - Maximum Dependability

முன் வெளியீட்டுத் திட்டம்

## கைவல்ய நவநீதம்

விளக்க விசேட - உரை

ஸ்ரீமத் ஞான குருயோகி இராமலிங்க சுவாமிகள்

- கணிப்பொறியின் அழகிய அச்சுக் கோர்ப்பு
- ஆப்செட் அச்சு, காலிகோ கட்டமைப்பு
- நூலின் விலை ரூ 150
- முன்வெளியீட்டு திட்ட விலை – ரூ 100
- முன் பதிவு செய்ய கடைசி நாள் 15.9.94
- நூல் வெளிவரும் நாள் – 30 [illegible] 1994

D.D அல்லது M.O. அனுப்ப வேண்டிய முகவரி :

வராகி பிரிண்டர்ஸ்
13, ஆள்வார்பேட்டை தெரு,
சென்னை - 18.

SIWA



*Can a Clock do more than show the time?*

Contact for Trade & Complementary Enquiries :

Authorised Distributors :

**SRINIVASA AGENCY**
"Perry's view" D-39 Madlee Road, First Street,
T.Nagar, Madras - 17. Phone : 4346454



• வழக்கறிஞர் விஜயன்



• துணைவேந்தர் அனந்தகிருஷ்ணன்

# 69 சதவிகிதமும் அடிதடி மிரட்டலும்

அறுபத்து ஒன்பது சதவிகித இட ஒதுக்கீட்டை எதிர்த்து ரிட் மனு தாக்கல் செய்த வழக்கறிஞர் விஜயன் உருட்டுக் கட்டைகளால் தாக்கப்பட்டார். ஆனால் அண்ணா பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் அனந்தகிருஷ்ணன், தெய்வாதீனமாக உயிர் தப்பினார். எப்படி?

அவரே சொல்லுகிறார் :

"சுமார் ஒன்றரையடி நீளமுள்ள கத்தியை எடுத்துக் கொண்டு வந்து நுழைந்த கும்பல், என் மனைவியிடம், 'வி. ஸி. எங்கே?' என்று கேட்டது. அதற்கு இரண்டு நிமிடங்கள் முன்புதான் கான்பூர் ஐஐடியிலிருந்து என்னைப் பார்க்க வந்திருந்த இரண்டு விருந்தினர், காரில் கிளம்பிப் போனார்கள். சமயோசிதமாக என் மனைவி, "வி.ஸி.தானே? காரில் இருக்கிறார்!" என்று சொல்லவே, அவர்கள் விரைந்து வெளியேற, காரும் போய் விட்டது!

"இது வெகு நேர்த்தியாகத் திட்டமிட்டு, ஒழுங்காகச் செயல்படுத்தப்பட்ட நிகழ்ச்சி என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. என் மனைவியின் சமயோசித பதில் என்னைக் காப்பாற்றியது. என்னுடன் இன்னும் இரண்டு பேரும் சோபாவில் அமர்ந்திருந்தனர். வந்த கும்பல் கொலைவெறியோடு இருந்தும் கூட, யாரைத் தாக்க வேண்டும் என்பது தெரியாமல் குழம்பிப் போய் விட்டார்கள்.

"இத்தனைக்கும் 11-ஆம் தேதியன்று நான் அறிக்கையில், "உச்சநீதி மன்றம் நிர்ணயித்த 50 சதவிகித இட ஒதுக்கீட்டின்படி இப்போது மாணவர்களைச் சேர்த்தாலும், பின்னால் அரசு கொள்கையில் ஏதேனும் மாற்றம் இருக்குமாயின், அதன்படி செயல்படுவோம்" என்றுதான் தெளிவாகவே கூறியிருந்தேன்.

"ஆயினும் சுமார் இருபது மிரட்டல் போன்கால்கள் அந்தச் சமயத்தில் எனக்கு வந்தன. இந்தச் சம்பவத்துக்குப் பிறகு, இரண்டு நாளைக்கு போலீஸ் பாதுகாப்புத் தந்தார்கள். பிறகு அவர்களும் போய் விட்டார்கள். இப்போது, பாதுகாப்புக்கு நானே வேறு ஏற்பாடு செய்து கொண்டு விட்டேன்.

"இன்று (22.7.94) பிற்பகல் கூட ஒரு கொலை மிரட்டல் போன்கால் வந்தது. "வழக்கறிஞர் விஜயனுக்கு நேர்ந்த கதி, உனக்கும் நேர வேண்டுமா?" என்று அந்தக் குரல் என்னைக் கேட்டது. இரண்டு தாக்குதலுக்கும் நிறையவே ஒற்றுமைகள் இருக்கின்றன என்பதே என் கருத்து. போலீஸ் கமிஷனர், 'அப்படி இல்லை' என்று சொன்னாலும், என்னால் அதை ஏற்க முடியவில்லை.

"நாகரிகமும், பண்பாடும், அமைதியும் நிறைந்து இருப்பதாக நாம் நினைக்கும் சமூகத்தில், 'இப்படியும் ஒரு வன்முறை நடக்கக் கூடுமா?' என்று யோசித்துப் பார்க்கவே வேதனையாக இருக்கிறது. சமூகத்தில் மனத் தளவில் சீர்கெட்டுப் போன ஒரு கும்பல்தான் இம்மாதிரி மோசமான செய்கைகளில் ஈடுபடத் துணியும். சட்டப் பிரச்னையையோ, சட்டச் சிக்கலையோ சட்டத்தின் வழியாகத் தான் தீர்க்க வேண்டும் என்பது புரியாதவர்கள்தான் இப்படிச் செய்வார்கள்.

"சட்ட வடிவத்துக்கு, பிரதமர் சிபாரிசின் பேரில் ஜனாதிபதியின் ஒப்புதலும் வழங்கப்பட்ட நிலையில், வன்முறையைக் கையாள என்ன அவசியம் வந்தது?

"ஒரு நாகரிக சமுதாயத்தில், ஒருவரது கருத்துக்கு மாறுபட்ட கருத்தை அச்சமின்றித் தெரிவிக்க வழி இல்லை என்றால், நம் சமூகம் எதை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது என்று நினைத்துப் பார்க்கவே அஞ்சுகிறேன்."

— **சித்தார்த்**


எதிர்க்கட்சிகள்
மக்கள்
ஆ! சர்க்கரை விலை எக்கச்சக்கமா உயர்ந்திருச்சே..! ஊழல்! ஊழல்!
விசாரணைக் கமிஷன் —
இட ஒதுக்கீடு பிரச்சனையில் அய்யா! சாணக்கியத்தனமா உன்னையாரு தனிநபர் மசோதா கொண்டுவரச் சொன்னது... மத்திய அரசுதான் அதைச் செய்யணும்..! உனக்கு ஒண்ணுமே தெரியல! செம அடி! ச்சீ! இந்தா வாங்கிக்க...
தனி நபர் மசோதாவுக்கு ஆதரவு.
தி.மு.க
ஜெ
ஆரம்பம் எங்கே... முடிவு எங்கே... இழுக்க இழுக்க வந்திட்டேயிருக்கே...
சீன துணைப் பிரதமர்
ராவ்
தொடரும் இந்திய சீன பிரச்சனை



# கல்கி



1994
ஜூலை 31
பவ
ஆடி 15
மலர் : 52
இதழ் : 53

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## குண்டர்கள் கையில் 69 அரசியல்!

**வ**ழக்கறிஞர் விஜயன் தாக்கப்பட்டு பல எலும்பு முறிவுகளுடன் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளதும் அண்ணா பல்கலைக் கழகத் துணைவேந்தர் அனந்தகிருஷ்ணன் தாக்குதலிலிருந்து தப்பியதும் 69 அரசியல் ஆட்சியாளர் கரங்களிலிருந்து நழுவி குண்டர்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளதைத்தான் உணர்த்துகிறது. அனந்தகிருஷ்ணனைத் தாக்கியவர்கள் யார் என்பது இன்று வரை கண்டுபிடிக்கப்படாத மெத்தனப் போக்கு இதை ஊர்ஜிதம் செய்கிறது. '69 இல்லையென்றால் ரத்த ஆறு ஓடும்' என்றும் 'தமிழகம் காஷ்மீரமாகும்' என்றும் அமைச்சர்களே பொறுப்பற்றுப் பேசும் போது இவர்கள் வன்முறையைத் தூண்டி சட்டத்தால் சாதிக்க முடியாததைக் குண்டாந்தடியால் சாதிக்க ஊக்கமளித்தவர்களாகிறார்கள்.

எல்லோருக்கும் சம நீதி, சமவாய்ப்பு என்ற தத்துவத்தை ஏற்கும் போது, பிற்படுத்தப்பட்டவருக்கு ஒதுக்கீடு செய்வதானாலும் அது, 'ஐம்பது சதத்துக்கு மேல் இருக்கக் கூடாது' என்பது உச்சநீதிமன்றத் தீர்ப்பு. இந்தக் கிடுக்கிப் பிடியிலிருந்து நழுவ, தமிழக அரசு, 'தமிழகத்தில் 69 சதவீதம் இட ஒதுக்கீடு செய்யப்பட வேண்டும்' என்று சட்டமன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றி, ஜனாதிபதியின் ஒப்புதலுக்கு அனுப்பியது. மத்திய அரசும், 'நமக்கேன் வம்பு' என்பது போல் ஜனாதிபதி ஒப்புதலுக்கு சிபாரிசு செய்ய, அவரும் 'முத்திரை குத்துவதே நம் வேலை' என்பதாகக் கருதி, அங்கீகாரம் அளித்து விட்டார். தமிழக ஆளும் கட்சிக்கு அபரிமித மெஜாரிட்டி உள்ள நிலையிலும், எதிர்க்கட்சிகள் எதுவுமே எதிர்க்காத நிலையிலும் இதுவரை எல்லாம் சுலபமாக முடிந்து போயிற்று.

ஆனால் நாளை, 'இது உச்சநீதி மன்றத்தின் தீர்ப்புக்கு முரணானது' என்று யாரேனும் வழக்குத் தொடரக்கூடும் என்பதால், மாநிலங்களுக்கு இட ஒதுக்கீடு தொடர்பாகச் சட்டம் இயற்ற முழு அதிகாரம் வேண்டும் என்றும், அது நீதிமன்றத்தின் விசாரணைக்கு அப்பாற்பட்டதாகக் கருதப்பட வேண்டும் என்றும் அரசியல் சாசனத் திருத்தம் செய்ய முனைந்திருக்கிறார்கள். இப்படி ஒவ்வொரு விஷயத்தையும் நீதிமன்ற விசாரணைக்கு அப்பாற்பட்டதாகக் கருதிக் கொண்டு போவதென்றால் நீதிமன்றம் என்பதாக ஒன்று எதற்கு? மெஜாரிட்டி பலம் என்ற அசுரத்தனமான ஆயுதத்தைக் கொடுங்கோலரிடம் கொடுத்ததாக ஆகிவிடும்.

தாழ்த்தப்பட்ட மக்களுக்காக வாதாடிய அம்பேத்கார் கூட, 'எல்லோருக்கும் சமநீதி, சமவாய்ப்பு' என்ற ஜனநாயகத் தத்துவத்துக்கு இடையூறு செய்கிற அளவில் இட ஒதுக்கீடு அமைய வேண்டும் என்று கருதவில்லை. சிறுபான்மை அளவில் இட ஒதுக்கீட்டினை குறிப்பிட்ட காலகட்டத்துக்குத்தான் சிபாரிசு செய்தார். ஆனால் பின்னர் வந்த அரசியல்வாதிகள், இதனை வோட்டுப் பிடிக்க நல்ல உபாயமாகக் கருதி, சதவீதத்தை அதிகரித்துக் கொண்டே போவதுடன், காலவரையின்றி நீட்டித்துக் கொண்டே போகிறார்கள். தாழ்த்தப்பட்ட மக்கள் என்றென்றும் தாழ்த்தப்பட்டவர்களாகவே இருப்பதில்தான் இவர்களுக்கு ஆதாயம். இவர்களின் உண்மை நோக்கம் தாழ்த்தப்பட்டவர்களின் முன்னேற்றம் அல்ல. அப்படியிருக்குமானால் —

கோடிக்கணக்கான பிள்ளைகள் பள்ளிப் படிப்பையே அறியாதவர்களாக இன்றைக்கும் இருந்து வருவது ஏன்? பள்ளி செல்ல உற்சாகம் இன்றி கூலி வேலைக்குப் போவது ஏன்? மதிய இலவச உணவு கூட இவர்களைக் கவர்ந்து இழுக்காதது ஏன்? கரும்பலகைகள் இல்லாத பள்ளிகள் எவ்வளவு? கூரையற்ற பள்ளிகள் எத்தனை, எத்தனை? ஒரே வகுப்பில் எண்பது முதல் நூறு பிள்ளைகளுக்கு ஒரே ஒரு ஆசிரியர் எப்படி படிப்பு அறிவு புகட்ட முடியும்? அவர் தரம் என்ன?

இப்படி குழந்தைக் குலத்தைக் குட்டிச்சுவராக்கிக் கொண்டு, கல்லூரியிலும் அரசுப் பணியிலும் இட ஒதுக்கீடு செய்து என்ன புண்ணியம்? அவற்றை ஏற்கெனவே முன்னேறிய, பிற்படுத்தப்பட்ட வகுப்பினர்தானே பெற்று அனுபவிப்பார்கள்? யோசிக்க வேண்டாமா? 'சுதந்திரம் பெற்று 47 ஆண்டுகளுக்குப் பிறகும் இத்தனை சலுகைகளுக்கு அப்புறமும், பிற்படுத்தப்பட்ட தன்மை (Backwardness) 80 சதவீதம் அதிகரித்திருக்கிறது' என்கிறது ஓர் ஆய்வு அறிக்கை. எந்த ஜன்மத்தில் முன்னேறுவது?

இட ஒதுக்கீடுக்குக் காலக்கெடு நிர்ணயிக்காதவரை, பொருளாதாரக் கண்ணோட்டத்தையும் அத்துடன் இணைக்காத வரை, குழந்தைக் குலத்தின் தரமான கல்வியில் நாட்டம் செலுத்தாத வரை —

அரசியல்வாதிக்குக் கொண்டாட்டம், மக்களுக்குப் பிற்படுத்தப்பட்டதாக நிரந்தர முத்திரை; குண்டாந்தடி அரசியல் தொடர்கதை.

# J.P.V. எஸ்டேட்ஸின்
# J.P.V. ஐடியல் பார்ம் லேண்ட்ஸ் & ரிசார்ட்ஸ் சார்பில் 23.6.94 அன்று

## ஹோட்டல் கன்னிமராவில்

# நடைபெற்ற குலுக்கலில் பம்பர் பரிசு



மாருதி கார் பெற்ற அதிர்ஷ்டசாலி!
திரு. என். சந்திரன் பிள்ளை,
23, 19வது அவென்யூ,
அசோக் நகர்,
சென்னை - 83

முதல் பரிசு பஜாஜ் ஸ்கூட்டர்
பெற்ற அதிர்ஷ்டசாலி!
திரு. பன்னீர்செல்வம்
764, பூந்தமல்லி நெடுஞ்சாலை,
சென்னை - 10.

இரண்டாவது பரிசு ரெப்ரிஜிரேட்டர்
பெற்ற அதிர்ஷ்டசாலி!
திரு. ராஜன், மைலப்பபுரம்,
கடையம்,
நெல்லை கட்டபொம்மன் மாவட்டம்.

மூன்றாவது பரிசு வாஷிங் மெஷின்
பெற்ற அதிர்ஷ்டசாலி!
திரு. சிவா,
தீட்டித் தோட்டம், பெரம்பூர், சென்னை - 11.

நான்காவது பரிசு இரண்டு நபர்களுக்கு
**2 IN 1** பெற்ற அதிர்ஷ்டசாலிகள்!
1. திரு. வி.பி. தனஞ்செயன்,
22, ஜீவரத்னம் நகர், அடையாறு, சென்னை-20.

எங்களுக்குப் பெரும் ஆதரவு அளித்த இந்திய வெளிநாட்டு வாடிக்கையாளர்களுக்கு
இதய நன்றி.

**V. Pichumani,**
VISTAAR,
Real Estate Consultants,
3-A, Valmiki Apts.,
Kalina, Bombay - 400 098
PH : 6133023 Res : 6140918



மேலும் விவரங்களுக்கு :
**J.P.V.** ரியல் எஸ்டேட்ஸ்
154, புரசைவாக்கம் நெடுஞ்சாலை,
சென்னை - 600 010.
போன் : 6422672, 6426471

# மனசு ரெண்டும் புதுசு

கிறிஸ்துவ ஜெயராமும் பிராமணக் குஷ்புவும் காதலித்துப் பெற்றோரை எதிர்த்துக் கலப்புக் கல்யாணம் பண்ணிக் கொண்டால் என்ன ஆகும்? ஊர் உலகத்தில் சொல்லிக் கொள்கிற மாதிரி, 'எல்லாம் ஒரு பேரனோ, பேத்தியோ பிறந்தால் ஒதுக்கி வைத்தவர்கள் ஒன்று சேர்ந்து விடுவார்கள்', என்பது சரிதானா?

சரி என்றும் காட்டி, சச்சரவு என்றும் கதை பண்ணுகிறது படம்.

ஏதோ டீச்சர் வேடத்துக்குப் பொருத்தமாய் இருக்கிறார் என்பதைத் தவிர குஷ்புவிடம் அந்தக் கிளுகிளுப்பு, அசல் துள்ளல் -மிஸ்ஸிங்.

அந்த ஓர் இடம் : குஷ்பூ தன் சிநேகிதி கல்யாணத்துக்கு மடிசார் புடைவை கட்டிக் கொண்டு கிளம்ப, அது கண்ட ஜெயராம், 'எந்தா சௌந்தர்யம்!' என்று கண்ணாலேயே கேட்டுக் கட்டிக் கொள்வதும் சரி, கல்யாண வீட்டில் தனக்குத் தெரிந்தவர்களிடமெல்லாம் கணவனை அறிமுகம் செய்து வைத்துக் குஷ்பு பூரித்துப் போவதும் சரி. சந்தோஷ ஊற்று என்றால், பந்தி விசாரணை சமயத்தில் ஆசையோடு சாப்பிட்டுக் கொண்டிருந்த ஜெயராமை ஓர் ஆசார சீலர் வந்து எழுப்பி விட, அது கண்டு பொடிந்து போன குஷ்பு இலையில் கை உதறி விட்டுப் பின்னோடு செல்வதும், ஜெயராம் கூனிக் குறுகி உட்கார்ந்திருக்க, அவரை எப்படிச் சமாதானப்படுத்துவது என்று தெரியாமல், மிகவும் நயங்கி இறங்கிய



குரலில், 'என்னங்க, இப்படியெல்லாம் நடக்கும்னு தெரிஞ்சிருந்தா இந்தக் கல்யாணத்துக்கே வந்திருக்க மாட்டேன்,' என்று சொல்கிறாரே, அது உருக்கம்.

காதல் மனைவியிடம் தனக்குக் கட்டுக்கடங்காத ஆசை என்பதைக் காட்ட அத்தனை ஓவராய்ப் போயிருக்க வேண்டுமா? சும்மா தலைவலி என்ற மனைவியை உடனடியாய் மருத்துவமனைக்குக் கூட்டிச் செல்ல பஸ்ஸோ ஆட்டோவோ கிடைக்கவில்லை என்று தீயணைப்பு வாகனத்துக்குப் போன் பண்ணி வரவழைத்து, அதில் மனைவியுடன் ஏறிக் கொண்டு போக்குக் காட்டி ஆஸ்பத்திரி வாசலில் இறங்கிக் கொண்டு... தமாஷ்!

கருமாரி, வடிவுக்கரசி...? ஒரே மீன் கடைச் சண்டை. ஆமாம், அசல் மீன்கடைச் சண்டை. துளியூண்டு வந்தாலும் டைரக்டர் சுந்தர்ராஜன் ஆறுதல்.

பிரச்னையும் புதுசில்லை. கதையும் புதுசில்லை. தலைப்பில் புதுசு என்ற வார்த்தை வருவதோடு சரி. தம்மாத்தூண்டு கதையை வைத்துக் கொண்டு இழு இழு என்று இழுத்து... மிஞ்சுவது அலுப்பு.

- பி.எஸ்.எஸ்.

குவைத் - சின்னச்
சின்ன செய்திகள் :

# ஈராக்கில் இன்னமும் போர்க் கைதிகள்!

●● குவைத் நாட்டில் மூன்று விதமான 'டாக்ஸி' சர்வீஸ்கள் : ஆரஞ்சு வண்ண பிரைவேட் டாக்ஸிகள் ரோடு ஓரத்தில் காத்திருக்கும் பயணிகளை ஏற்றிச் செல்கிறது! 'Point To Point' என்ற சர்வீஸ், தேவையான அளவு பயணிகள் கிடைத்தவுடன் குறிப்பிட்ட இடத்திற்குப் போவதற்கு! 'Call Cabs' என்று ஒரு விதம். டெலிபோன் செய்து முன்பதிவு செய்தால் கிடைக்கும் சர்வீஸ்!

●● பதினாறாம் நூற்றாண்டு வரை - அரேபிய ஷேக்குகளுக்கு குவைத் 'கோடை வாசஸ்தலமாக' மட்டும் பயன்பட்டு வந்தது!

●● மற்ற அரபு நாடுகளைப் போல் அல்லாமல் குவைத்தில் தனியாகக் கார் ஓட்டிச் செல்லும் பெண்களைக் காண முடியும்.

●● ஈராக் சிறைகளில், போர்க் கைதிகளாக இன்னும் சுமார் 600 குவைத் நாட்டு ஆண், பெண் அடைபட்டுள்ளனர். அவர்களை விடுவிக்கும் முயற்சியாக யுனைடெட் நேஷன்ஸ் - செக்ரடரி ஜெனரல் 'காபி'க்கு - உலகெங்குமிருந்து இதற்கான வேண்டு


• டெலிகம்யூனிகேஷன் டவர்...

கோளை போஸ்ட் கார்டில் எழுதி அனுப்பும்படி எல்லா நாட்டு மக்களையும் விளம்பரங்கள் மூலம் கேட்டுக் கொண்டுள்ளது குவைத் அரசு.

●● வாகனங்களை விற்பதும் வாங்குவதும் இங்கு சுலபம். இதற்கென்றே இங்கு ஒரு பெரிய மைதானம் இருக்கின்றது. வாகனங்களை அங்கே கொண்டு போய் நிறுத்தி விட்டால் போதும். அப்போதே ஏலம் போட்டுப் பணத்தைக் கொடுத்து விடுவார்கள்.

●● புதிய மற்றும் பழைய பொருட்கள் மிக மலிவாய் கிடைக்கும் இடம் வெள்ளிக்கிழமை மார்க்கெட். ஊரை


• இங்கு வாகனங்களை விற்கலாம்; வாங்கலாம்...


• எப்போதும் கிடைக்கும் பச்சைக் காய்கறிகள்...

விட்டுப் போகிறவர்கள் தாங்கள் அனுபவித்த பொருட்களையெல்லாம் கொண்டு போவது சிரமம் என்பதால் போகிற விலைக்குப் போகட்டும் என்று தள்ளி விட்டு விடுவார்கள். செகண்ட் ஹாண்ட் ஐட்டங்கள் இங்கு பிரபலம்.

●● குவைத் இந்திய தூதுவரான பிரேம்சிங் மிகவும் எளிமையானவர். யார் வேண்டுமானாலும் எளிதாய்ச் சந்திக்கலாம்.

மஹாராஷ்டிரா பூகம்ப சமயத்தில் இங்கு தாகூர் பாடல்களை மேடையில் அரங் கேற்றிப் பணம் வசூல் பண்ணி அதை அனுப்ப ஏற்பாடு செய்தார்.

●● சுல்தான் சென்டர் என்பது ஒரே கடை! இருபத்து நான்கு மணி நேரமும் திறந்திருக்கும். இங்கு கிடைக்காத பொருட் களே இல்லை. இரவு பகல் எப்போதும் கூட்டம். கார் பார்க்கிங் கிடைப்பது அரிது. வெளிநாட்டிலிருந்து பச்சைக் காய்கறிகளும் ஃப்ரெஷ்ஷாய் வந்து இறங்கும்.

●● டெலிகம்யூனிகேஷன், சாடிலைட் லிங்கிற்காக உருவாக்கப்பட்டிருக்கும் 'டவர்' உயரம் 372 மீட்டர். ஆசியாவிலேயே மிக உயர்ந்த டவர்! உலகத்தில் நான்காவது இடம் பெறுகிறது.

●● அமெரிக்காவிற்கு ஒரு சுதந்திரதேவி சிலை போல, இந்தியாவிற்கு தாஜ்மஹால் போல, பிரான்ஸுக்கு ஈபிள் டவர் போல, குவைத்தை அடையாளம் காட்ட ஒரு குவைத் டவர் (அட்டைப்படம்). டூரிஸ்ட்களை ஈர்க் கும் பொக்கிஷம். 187 மீட்டர் உயரம் கொண்ட இது வெறும் டவர் மட்டுமல்ல; இதன் கீழ்ப் பகுதியில் சுமார் நாலு மில்லியன் லிட்டர் கொள்ளளவிற்கு வாட்டர் டேங்க் உள்ளது.
மேல் பகுதியில் மூன்று ரெஸ்டாரெண்ட் களும் ஒரு இன்டோர் தோட்டமும் உண்டு. ஊசி போன்ற கூர்மைப் பகுதியில் சுழலும் ரெஸ்டாரெண்டிலிருந்தவாறு குவைத்தைச் சுற்றிப் பார்க்கலாம். சாப்பிடலாம்.
அடுத்த டவர் 147 மீட்டர் உயரம் கொண் டது. இதிலும் 4½ மில்லியன் லிட்டர் கொள் ளளவிற்கு வாட்டர் டேங்க் கட்டப்பட்டுள் ளது. இடைப்பட்ட கம்பு டவர் ஒளி அமைப் புக்காக உருவாக்கப்பட்டுள்ளது. இதன் பால் கனியிலும் ரெஸ்டாரெண்ட் உண்டு.

●● குவைத் நாட்டின் தேசிய பறவை ராஜாளி. (அட்டைப்படம்). இதை வீடுகளில் வளர்க்கிறார்கள். வேலைப்பாடு மிகுந்த துணி களைக் குவைத்தியர்களும் நெய்கிறார்கள் (அட்டைப்படம்).

- பார்கவி, வினோத்,
இளம்பரிதி, இராமசுப்ரமணியன்,
அரியலூர் ராஜேந்திரன், சுப்புராமன்.
படங்கள் :
மணி, இராமசுப்ரமணியன்,
ரக்ஷா



# திருப்பூர் கல்கி வாசகர்களுக்கு...

திருப்பூருக்கு வெளியே வாழும் லட்சக்கணக்கான கல்கி வாசகர்கள் திருப்பூர் பற்றி என்னென்ன தெரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறீர்கள்?

ஆகஸ்டு 28 இதழில் திருப்பூர் பற்றிய பல சுவையான செய்திகளை உள்ளடக்கிய ஒரு "மெகா" சிறப்புக் கட்டுரை வெளியிட உத்தேசம். இதில், "அட, அப்படியா!" என்று வியக் கும் விதமாக திருப்பூர் ஸ்பெஷல் அம்சங்கள் என்னென்ன இடம்பெற வேண்டும்? அல்லது "த்சொ... த்சொ..." என்று அனுதாபப்படும்படியான துயரங்கள்? சிரிக்க வைக்கும் விஷயங்கள்? உங்கள் யோசனைகளைத் தெரிவிக்கக் கடைசித் தேதி : 5.8.94

உங்கள் ஊரைப் பற்றி உங்களைவிட நன்கு அறிந்தவர் யார்? அதனால் உடனே எழுதி ஒத்துழைப்புக் கொடுங்கள். நன்றி.

- ஆசிரியர்

# படிப்பது ராமாயணம்; அடிப்பது...!

♦ போராட்டங்களையெல்லாம் கைவிட்டு விட்டு, தமக்கென்ற புதிய பாணியில் வை.கோ. செல்வாரென்றால்; நாளை மக்களின் அபிமானம் பெற்ற மாபெரும் தலைவராகலாம். வை.கோவிற்குத் தலையங்கம் மூலம் சொன்னது புத்திமதி மட்டுமல்ல. உண்மையும் கூடத்தான்!

திருச்சி-17, தென்னூர் யாதவன்.

♦ வை.கோ. அரசியல் தலைவரே தவிர, சமூக சீர்திருத்தவாதி அல்ல. எல்லோரையும் போல் அவரும் போராட்டம் செய்து மக்களின் கவனத்தை ஈர்ப்பது தவிர்க்க முடியாத ஒன்று. மாநாடு கூட்டி விவாதித்திருக்கலாமே? என்ற அறிவுரையை ஜெயலலிதாவிற்கு வழங்கியிருந்தால் பொருத்தமாக இருந்திருக்கும். மாநாடு கூட்டி விவாதிப்பது அவ்வளவு சாதாரணமா...? அப்படியே செய்தாலும் உடனடி பலன் கிடைக்கப் போவதில்லை. வை.கோ.வின் ப(ா)ணி தவிர்க்க முடியாதது.

ஆத்தூர், ஸ்ரீராம்குமார்.

♦ அதிகாரக் குறைப்பு அவசியந்தானா? கவர் ஸ்டோரி கண்டேன். பலதுறைகளிலும் சிறந்து விளங்கும் அவர்களுடைய கருத்துக்கள் சிந்திக்கச் செய்தன. "அதிகாரக் குறைப்பு அவசியமில்லை....அவருடைய அதிகார வரம்பு மீறலைக் கட்டுப் படுத்துவதே அவசியம்" என்ற கருத்தே என்போன்றவர்களின் கருத்தும் ஆகும்.

திருவண்ணாமலை, என்.சண்முகம்.

♦ "பெருமாள் பெயரால் பகல் கொள்ளை" என்ற கட்டுரையில் மிகவும் பிரயாசைப் பட்டு, நேர் விசாரணைகளும் செய்து, வாசகர்களுக்கு விஷயங்களை விளக்கியுள்ளீர்கள். E.O.&A.C. யான ஈஸ்வரமுத்து சொல்வதற்கும் செய்ததற்கும் சம்பந்தம் காண இயலாத தாயுள்ளது. நீங்கள் பத்திரிகா தர்மமாக இது விஷயத்தை மக்கள் கவனத்திற்குக் கொண்டு வந்துள்ளமைக்குப் பாராட்டு.

குரோம்பேட்டை, எஸ்.குருஸ்வாமி.

♦ "பெருமாள் பெயரால் ஒரு பகல் கொள்ளை" கட்டுரை படு திகைப்பில் ஆழ்த்தி விட்டது. "படிப்பது ராமாயணம் அடிப்பது பெருமாள் பெயரால் கொள்ளை" என்று புது மொழியை உருவாக்கி விட்டார்களே!

அயன்புரம், த.சத்தியநாராயணன்.

♦ 'லட்சரூபாய் கேள்விகள்!' கட்டுரை அட்சரலட்சம் பெறும்!

கும்பகோணம், கே.என்.பாலகிருஷ்ணன்.

♦ மனச்சாட்சி மனச்சாட்சி என்கிறார்களே அது எப்படியிருக்கும் என்பதற்கு ஒரு நல்லதொரு உதாரணம் செ.சங்கர்பாபுவின் 'வீரர்' என்ற சிறுகதை.

மங்கை நல்லூர், ஆர்.செல்வராணி

♦ 'சிவலப்பேரி பாண்டி'- பட விமர்சனம் சிறந்த கண்ணோட்டத்துடன் எழுதப்பட்டிருந்தது. பாராட்டுக்கள். இருப்பினும், இசையமைப்பாளர், காட்சியமைப்பு, சண்டைக் காட்சிகளைத் தன் உயிர் கொடுத்து அமைத்துள்ள கலைஞர்களையும் ஒரு வரி பாராட்டியிருந்தால், அவர்களின் வளர்ச்சிக்குச் சிறந்த வழிகாட்டியாக அமைந்திருக்கும்.

காட்பாடி, அ.சோ.விஸ்வநாதன்.

♦ 'இட்ஸ் டிஃபரண்ட்'-டில் வாழப்பாடியாரின் நிலைமையைக் கூறி முதல் தர நகைச்சுவையைக் கொடுத்து விட்டீர்கள்!

வந்தவாசி, எம்.எம்.ஆனந்தன்.

♦ ஜெயலலிதா காலடியில் உட்கார்ந்து கொண்டு, டி.ராமச்சந்திரனை கே.கே.எஸ்.ஆர். வரவேற்கும் கார்ட்டூனை இன்னமும் நினைத்துச் சிரிக்கிறேன்.

கும்பகோணம், டி.எஸ்.சீதாராமன்.

♦ நம் முன்னோர்கள், நாடு விடுதலை பெற எவ்வளவு துன்பப் பட்டிருக்கிறார்கள் என்பதை, அவ்வப்போது சுதந்திரப் போராட்ட வீரர்களின் வாழ்க்கை வரலாற்றைப் படிக்கும் போது உணர்ந்து மெய்சிலிர்த்ததுண்டு. ஆனால் 'ஒட்டு மொத்தமாக இந்திய தேசிய காங்கிரஸ் ஆரம்பித்த காலம் முதல் விடுதலை பெற்ற நாள் வரையிலான நிகழ்வுகளை இந்தியக் குடிமக(ன்)ள் என்ற அடிப்படையில் படிக்க மாட்டோமா' என்று ஆத்மார்த்தமாக ஏங்கியிருக்கிறேன். என் ஏக்கம்... 'மணிக்கொடி' மூலம் தீரும் என்ற நம்பிக்கை எழுந்துள்ளது. ஆரம்பமே.. மனத்தைக் கவர்வதாக உள்ளது. இந்தக் காலத்தில் இப்படிப் பட்ட ஒரு அற்புதமான நாவலை எழுதத் துணிந்த கதாசிரியைக்கும் பரிசு வழங்கிய கல்கிக்கும் என் இதயங்கனிந்த நன்றியும் வாழ்த்துக்களும்.

நாகப்பட்டினம், சரோஜா.

# ஒரு காலப் பெட்டகம்



வைரவிழா மலர் வாங்கும் வாசகர்களுக்கு
பல பரிசுகள் காத்திருக்கின்றன:

Lalitha வழங்கும் வைர மோதிரம்
வெள்ளி டீ செட்

NEPC AIRLINES வழங்கும்
விமான டிக்கெட்டுகள்

Nalli
வழங்கும்
பட்டுப் புடவைகள்

Sumeet®
வழங்கும் மிக்ஸிகள்

சில்வர் லைன் வழங்கும் நவநாகரீக ஷர்ட்டுகள்

அறுபது ஆண்டுகளாகத்
தமிழ் மக்களின்
வாழ்க்கையோடு பின்னிப்
பிணைந்த ஒரு நாளேடு.
'தினமணி' இதன் வரலாறு ஒரு
நாளேட்டின் வரலாறு
மட்டுமல்ல, இந்த
நாட்டினுடைய வரலாறும்
ஆகும்.

தினமணி வைரவிழா
ஆண்டு நிறைவையொட்டி
கடந்த நாட்களின் காலப்
பெட்டகமாகவும், நிகழ்கால
அறிஞர்களின்
படைப்புகளுடனும், எதிர்கால
நம்பிக்கை நட்சத்திரங்களின்
கதைகளோடும் ஒரு
'வைரவிழா மலர்'
வெளிவரவுள்ளது.

* பழைய தலையங்கங்கள்,
சட்டமன்ற நிகழ்ச்சிகள்,
கார்டூன்கள்.
* வண்ணப் படங்கள்.
* அரசியல், விஞ்ஞான,
இலக்கியக் கட்டுரைகள்.
* புகழ்பெற்ற இலக்கிய
கர்த்தாக்களின் அன்றைய,
இன்றைய படைப்புகள்.

400 பக்கங்களுக்கு மேல்
எக்காலத்திலும் போற்றிப்
பாதுகாக்கப்பட வேண்டிய
ஒரு பொக்கிஷம். எதிர்காலச்
சந்ததியினருக்குத் தந்திட
வேண்டிய பெரும் செல்வம்.

தினமணி
'நிமிர்ந்த நன்னடை, நேர்கொண்ட பார்வை
நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகள்.'

**விவரங்கள்: தினமணி கதிரில்**

# பஞ்சம் பிழைக்க வந்தவர்கள் பணத்தில் மிதக்கிறார்கள்!

**ம**த்திய அரேபியாவில் கடும் பஞ்சம் ஏற்பட்ட போது, அங்கிருந்த பழங்குடி மக்கள், கி.பி. 1710-ல் தண்ணீரையும் பசுமையையும் தேடித் தெற்குப் பகுதிக் கடற்கரையோரத்திற்குக் குடிபெயர்ந்தனர். அங்கு 'குட்' என்ற ஒரு கோட்டையைக் கட்டினர். குட் என்பதுதான் நாளடைவில் 'குவைத்' என்று ஆனதாகச் சொல்கிறார்கள். அழிந்து போன ரோமானிய நாகரிகத்தின் சுவடுகள் இன்னமும் இருக்கின்றன.

குவைத்தில் எண்ணெய்வளம் கண்டு பிடிக்கப்பட்டு உலகின் மிகப் பெரிய பணக்கார நாடுகளில் ஒன்றான பிறகும் இங்குள்ள பழைமைவாதிகளான 'பத்தூஸ்' என்றழைக்கப்படுபவர்கள் இன்னமும் ஒட்டகம் வளர்ப்பதில்தான் ஈடுபட்டிருக்கிறார்கள். பழங்காலத்தில் பாலைவனக் கப்பல்களாகப் பயன்பட்டுக் கொண்டிருந்த ஒட்டகங்கள், இன்றைக்குக் குவைத்தியர்கள் மிகவும் விரும் பிச் சாப்பிடும் ஒன்றாக இருக்கிறது. ஆமாம்; இங்கே ஒட்டகக் கறி இல்லாத விருந்தே கிடையாது. சொல்லப் போனால் எத்தனை ஒட்டகங்களை அடித்து விருந்து சமைக்கிறார்கள் என்பதைப் பொருத்துத்தான் குவைத்தியர்களின் வசதியே கணக்கிடப்படுகிறது!

"பெரும்பாலும் குவைத்தியர்கள் ஆடம்பரப் பொருட்களையே அதிகம் விரும்பி வாங்குகின்றனர். அதுவும் பொருட்கள் பெரிதாக இருக்க வேண்டும்; பளபளப்பாகவும் இருக்க வேண்டும். புதிதாக எந்தப் பொருள் வந்தாலும் உடனடியாக வாங்கித் தங்கள் வீடுகளில் வைத்து விடுவார்கள்!" என்று சொல்கிறார்கள், கடந்த பத்தாண்டுகளாகக் குவைத்தில் டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸ் நடத்தி வரும் இளம்பரிதியும் சோமசுந்தரமும்.

பணம் ஏராளமாகப் புரள்வதாலோ என்னவோ, ஷாம்பு கூட ஐந்து லிட்டர் ஆறு லிட்டர் என்று லிட்டர் கணக்கில்தான் வாங்குகிறார்கள். ஆயினும் குவைத்திய் பெண்கள் பேரம் பேசாமல் எதையும் வாங்குவதில்லை என்பது ஆச்சரியம். நம்ம ஊர் சமையல் பாத்திரங்களை இந்தப் பெண்கள் விரும்பி வாங்குகிறார்கள். இட்லி, தோசை, பூரி போன்றவற்றை எப்படிச் செய்வது என்பதையும் ஆர்வமாகக் கேட்டுத் தெரிந்து கொள்கிறார்கள். இந்தப் பெண்களுக்குத் தடிதடியான தங்க ஆபரணங்களை அணிவதில் ஏராள ஆர்வம். இவை சமைக்கும்






• செல்வம் கொழித்தாலும் கரன்சி நோட்டில் கடவுளை நினைவுகூர்கிறார்கள்.



• தங்க நகைகளை விரும்பி அணியும் குவைத்தியப் பெண்கள்



போது சூடானால் கூட அப்படியே வளையும். அந்த அளவுக்கு சுத்தத் தங்கம்!

ஆயினும் நம்ம ஊரை ஒப்பிடும் போது குவைத்தியப் பெண்களுக்குச் செல்வச் செழிப்புத்தான் அதிகமே தவிர, உரிமைகள் மிகவும் குறைவு. இவர்களால் இஸ்லாமியக் கட்டுப்பாடுகளை மீற முடியாது. உதாரணத்திற்கு வாக்குரிமை. பெண்களுக்கு இங்கே வாக்குரிமை கிடையாது. பெண்களின் அதிகபட்ச படிப்பே பத்தாம் வகுப்பு வரைதான். அதற்கு மேல் படிப்பதற்குக் குவைத்தில் வசதிகளே இல்லை. இத்தனை கட்டுப்பாடுகளையும் மீறி ஒருசில பெண்கள் வெளிநாடுகளுக்குச் சென்று படித்து விட்டு வந்து, சில முக்கிய பொறுப்புகளிலும் இருக்கிறார்கள் என்றாலும் அதெல்லாம் இயல்பான விஷயங்கள் அல்ல. பெரும்பாலும் அரசாங்க உத்யோகங்களில் தான் அமர்கிறார்கள்.

குவைத்தியர்களைப் பொருத்தவரை அவர்களுக்கு எல்லாப் படிப்புமே இலவசம்தான். உள்ளூர் குவைத்திய மாணவர்கள் வெளி நாடுகளில் படிக்க விரும்பினால், அதற்கான செலவுகளையும் அரசாங்கமே ஏற்றுக் கொண்டு படிக்க வைக்கிறது. மக்கள் தொகைப் பெருக்கத்தை ஊக்குவிப்பதற்காக, பிறக்கும் ஒவ்வொரு குவைத்தியக் குழந்தைக்கும் மாதம் ஐயாயிரம் ரூபாய் வீதம் அரசாங்கம் மான்யமளிக்கிறது என்றால், படித்து விட்டு வேலையில்லாமல் இருப்பவர்களுக்கு மாதம் 25,000 ரூபாய் உதவித் தொகையும் அளிக்கிறது!

ஆயினும் பத்தூஸ் என்றழைக்கப்படும் குவைத்தியர்கள் படிப்பில் ஆர்வம் காட்டுவதில்லை. ஒட்டகம், ஆடு மேய்க்கும் தொழிலை விட்டால் டாக்ஸி ஓட்டுகிறார்கள் அல்லது தொழிலாளர்களாகப் பணி செய்கிறார்கள். அவ்வளவுதான்! ஆயினும் இவர்களை ஏழைகள் என்று சொல்ல முடியாது.

இலவச மருத்துவம், இலவசக் கல்வி, இலவச வீடு தவிர, இவர்களுக்கு ரேஷன் கடைகளில் 80 சதம் தள்ளுபடி விலைகளில் தரமான பொருட்களை அரசாங்கம் வழங்குவதால் சாப்பாட்டுக்குக் கஷ்டப்படும் நிலையில் இங்கே யாருமே கிடையாது.

பெரும்பாலான குவைத்தியர்களின் வீடுகளில் இந்திய மற்றும் இலங்கைத் தமிழ்ப் பெண்கள்தான் வீட்டு வேலை செய்பவர்களாக இருக்கிறார்கள். 'ஹவுஸ் மெய்ட்' என்று சொல்லப்படும் இவர்களுக்கு வேலை பார்க்கும் வீட்டிலேயே தங்குவதற்குத் தனி இடம் உண்டு. சாப்பாடும் அங்கேதான். வீட்டு வேலைகளோடு குழந்தைகளைப் பராமரிப்பதும் இவர்கள் பொறுப்பு.

எஜமானிகளுக்கு இவர்களைப் பிடித்து விட்டால் போதும் அன்பு மழை பொழிவர். கூடவே பண மழையும்! இவர்கள் ஊர் திரும்பும் போது பொன்னும் பொருளுமாய் வாரி வழங்குவார்கள்!

இந்தப் பெண்களுக்கு வாரம் ஒருமுறையோ, இரண்டு வாரங்களுக்கு ஒரு முறையோ பகல் நேர விடுமுறை உண்டு. அந்த நாட்களில் இவர்கள் மாலியா என்னுமிடத்தில் ஒன்று கூடித் தங்கள் வீட்டு - நாட்டு விசேஷங்களைப் பரிமாறிக் கொள்கிறார்கள்.

குவைத்தியர்களின் வீடுகளில் வேலைக்குச் சேரும் பெண்களுக்கு, முதலில் அரபு மொழி கற்றுத் தருகிறார்கள். பிறகு அவர்களது உணவு தயாரிக்கும் முறை. வீட்டுக்குள் ஆண்கள் இருக்கும் போது இவர்களும் பர்தா போட்டாக வேண்டும். இருப்பினும் இந்தப் பெண்களுக்குப் பின்னால் சில சோகக் கதைகள் இருப்பதையும் மறுக்க முடியாது.

**- பிரேமா, சுகுணா இளமாறன், இராமசாமி, நல்லசிவன் சங்கர், ஜெ. ராஜ்முகமது, அரசு, ரம்யா ராஜேந்திரன்.**

• ஆடம்பரப் பொருள்களை விரும்பி வாங்குகிறார்கள்...

# வேதபுரத்து வியாபாரிகள்

5

**'வேதபுரத்தில்தான், உலகிலேயே வேறெங்குமில்லாமல், முதல் முறையாகப் பறவை எச்சத்தை ஆய்வதற்கான ஆராய்ச்சிக் கூடம் நிறுவப்பட்டது. இது, வேதபுரத் தலைவரின் மகத்தான சாதனை!'**

*(வேதபுர வரலாறு - பேராசிரியர் நவமணி - பக். 231-232)*

அன்று கலியனின் உடம்பு கோபத்தில் ஆடியதே தவிர, இதற்கு மேல் அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

வேதபுரத்தில், தனிநபர் ஆட்சியின் காரணமாக, யாருக்கு எவ்வளவு 'செல்வாக்கு' உண்டு என்பதை யூகித்தறிவது கஷ்டம். சமுதாய தர்மத்தை நிர்ணயிப்பது பணம். இதுவே செல்வாக்குக்கும் காரணமாகிறது. அபூர்வாவிடம் நிறையப் பணம் இருந்தது. கலியன் அவளைக் கண்டு பயப்படுவதில் ஆச்சர்யமில்லை.

அபூர்வா அன்றைய காட்சியை நினைத்துப் பார்த்தாள்.

கலியன் கோபத்தைச் சமாளித்துக் கொண்டு, சொன்னார் : 'இந்தத் தே..'

ஏதோ கெட்ட வார்த்தை சொல்ல நினைத்திருக்க வேண்டும், சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு, 'அதான் இவளைத்தான் சொல்றேன், உங்களுக்குத் துணை வேணும்னா வச்சுக்கங்க, ஆனா இவ யார்கிட்டே வேணுமானாலும் எப்பொ வேணுமானாலும் போயிடுவா... ஞாபகம் வச்சுக்கங்க..'

'சரி... இந்த வீட்டைப் பூரா நான் வாடகைக்கு எடுத்துக்கலாமா?' என்றாள் அபூர்வா.

கலியன் சில விநாடிகள் தயங்கினார். சிந்திப்பதற்கு அவகாசம் வேண்டி, 'வீடு பூராவா?' என்று கேட்டு விட்டு, அபூர்வாவை உற்றுப் பார்த்தார்.

'ஆமாம்... மாடிக்குத் தர்ற வாடகையைக் கூழுக்கும் சேர்த்துத் தரேன்..'

'அட்வான்ஸ்?'

'தரேன்..'

'ஒரு தனி ஆளுக்கு இவ்வளவு பெரிய வீடு வேணுமான்னு..'

'ரெண்டு பேரு..'

'ஆமாமாம். சரி.. எனக்கென்ன, வாடகை வருது... வீட்டை எடுத்துக்கங்க..'

கலியன் போய் விட்டார்...

வனிதா அந்த 'இன்னொரு ஆளை'க் கண்டுதான் பயப்பட்டாள். அபூர்வா அவரையும் சமாளித்தாள். அவருடன் டெலிஃபோனில் தொடர்பு கொண்டாள்.

'என் பேரு அபூர்வா... வெளிநாடு. உங்க நாட்டைப் பத்தி எழுத வந்திருக்கேன், உங்க தலைவர் ஆசீர்வாதம்.'

'வாங்க, வாங்க. நான் என்ன செய்யணும்? சொல்லுங்க... நீங்க 'வெளிநாடு'ன்னா எது...?'

அவள், தன் நாட்டின் பெயரைச் சொன்னாள். மந்திரச் சொல். செல்வம் கொழிக்கும் நாடு.

'அப்படிச் சொல்லுங்க... அரசாங்க அழைப்பிலே வந்திருக்கீங்களா?'

'ஆமாம்.. ஒரு விஷயம். வனிதா, எனக்குத் துணையா என்னோட இருக்காங்க..'

சிறிது நேரம் மௌனம்.

'வனிதா...? கலியன்...?' என்றார் சில விநாடிகள் கழித்து.

'ஆமாம்...'

'சரி.. எனக்கென்னங்க? எங்க நாட்டைப் பத்தி எழுத வந்திருக்கீங்க, இது கூட நான் செய்யாட்டி...?'

'உங்க தலைவரையும் பேட்டி காணலாம்னு

**இந்திரா பார்த்தசாரதி**

உத்தேசம்...'

'அப்பாடீங்களா? எங்க தலைவர் ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறை நிகழும் அற்புதம். ஆனா அவரை உங்களாலே பாக்க முடியுங்களா?'

'முடியும்... அப்பொ நீங்க சொல்றீங்க, ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலே, உங்க தலைவர் மாதிரி இன்னொரு தலைவர் இருந்திருப்பார்னு. இல்லியா? அவர் பேரென்ன...?'

'இல்லீங்க, இல்லீங்க... அப்படி அர்த்தமில்லே. எங்க தலைவர் மாதிரி பிறந்ததுமில்லே, பிறக்கவும் முடியாது. அவர் மாதிரி, என்ன சொல்றதுங்க, ஒருமுறைதான் அற்புதம் நிகழும். அற்புதமா? இல்லே, அற்புதத்தின் எல்லை...'

அவர் வார்த்தைகளை அடுக்கிக் கொண்டே போனார்.

'நன்றி' என்று சொல்லி விட்டு, அபூர்வா ஃபோனை வைத்து விட்டாள்.

அபூர்வா இவற்றையெல்லாம் நினைத்துப் பார்த்ததும் முகத்தில் புன்னகை தோன்றியது.

"என்ன சிரிக்கறீங்க?" என்றாள் வனிதா, அவளிடம் காப்பித் தம்ளரைக் கொடுத்துக் கொண்டே.

"உங்க நாடு ஒரு சுவாரஸ்யமான நாடு" என்றாள் அபூர்வா.

"நீங்க இன்னிக்குப் பாக்கப் போறீங்களே, நஞ்சுண்டன், அவரு இன்னும் பெரிய சுவாரஸ்யமான ஆளு..."

"அப்படியா?"



"நிறைய விஷயமுள்ள ஆளு... அதனால் தான் அவரை முதல்லே பாருங்கன்னு நான் சொன்னேன்..."

"உனக்கு அவரைப் பத்தி எப்படித் தெரியும்?"

"எனக்கெப்படியோ தெரியும், அதை விடுங்க... அவரு உங்களை உடனே பாக்க ஒப்புத்துக்கிட்டது ஆச்சர்யம்..."

நஞ்சுண்டனைப் பற்றி வனிதா முதலில் சொன்ன போது, அபூர்வா அதில் அவ்வளவாக அக்கறை காட்டவில்லை.

எதற்கும் இருக்கட்டுமென்றுதான் அவருடன் ஃபோனில் பேசினாள்.

'என் பேர் அபூர்வா. வெளிநாடு. நான் உங்க நாட்டைப் பற்றியும், உங்க தலைவரைப் பற்றியும் எழுத வந்திருக்கேன்.'

சிறிது நேரம் எதிர்த் திசையில் மௌனம் நிலவியது.

'உங்களால் உதவி செய்ய முடியுமா?' என்றாள் அபூர்வா.

'என்ன உதவி?'

'நீங்க எழுத்தாளர்னு சொன்னாங்க, பெரிய ஆராய்ச்சியாளர்னும் கேள்விப்பட்டேன், அதனாலே...'

'அதனாலே...?'

'உங்க உதவி எனக்குத் தேவை...'

'மன்னிக்கவும்...'

'ஏன் அப்படிச் சொல்றீங்க...?'

'எங்க நாட்டைப் பத்தியும் தலைவரைப் பத்தியும் லட்சக்கணக்கான புத்தகங்கள் நூல் நிலையங்கள்ளே இருக்கு. வாங்கிப் படியுங்க... நானே, எவ்வளவு புத்தகம் எழுதியிருக்கேன்னு எனக்கே கணக்குத் தெரியாது... ஒவ்வொரு 'ப்ரமோஷனு'க்கும் ஒரு புத்தகம்...'

'உங்களைப் பாக்கலாமா?'

'எதுக்கு?'

'எதுக்குன்னு தெரியலே... ஒரு திமிர் எண்ணம், நீங்கதான் இந் நாட்டுத் தலைவரோன்னு...'

நஞ்சுண்டன் சிரித்தது அழகாக இருந்தது. சிரிப்பினின்றும் அவனை ஓர் இளைஞனாகக் கற்பனை செய்து பார்க்க முடிந்தது.

'சரி.. வாங்க' என்றான் அவன். இது அவளுக்கு ஆச்சர்யத்தைத் தந்தது.

அபூர்வா கட்டிலினின்றும் எழுந்து சோம்பல் முறித்தாள்.

"எத்தனை மணிக்கு அவரைப் பாக்கப் போறீங்க...?"

"காலையிலே... எப்போ வேணுமானாலும் வரலாம்னாரு..."

"சரி... புறப்படுங்க. மணி எட்டரை ஆகப் போவுது. குளிச்சிட்டு..."

அபூர்வா புறப்படுவதற்குத் தயாரானாள்.

நஞ்சுண்டன் அலுவலகம் நகரின் பிரதான சாலையிலிருந்தது. 18-வது மாடி.

மாடியின் சிகரத்தில், சிகரத்துக்குச் சிகரமாக, தலைவரின் சிலை வைக்கப்பட்டிருந்தது. கீழேயிருந்து பார்த்தாலும் தெரியும்படி அவ்வளவு உயரமான சிலை. விமானங்கள் அவ்வழியாகப் பறக்கத் தடை உத்தரவு.

சூரிய ஒளியில் குளித்துத் தலைவர் 'தகதக'வென்று பிரகாசித்துக் கொண்டிருந்தார்.

அபூர்வா வரப் போவது பற்றி வரவேற்பறையில் ஏற்கெனவே அறிவிக்கப்பட்டிருந்ததால், அவளால் சாதாரணமாக வேதபுரத்து அரசாங்க அலுவலகங்களில் இருக்கக்கூடிய தடைகளை எல்லாம் தாண்டி, நஞ்சுண்டன் அறையைச் சுலபமாக அடைய முடிந்தது.

அவள் நினைத்தபடி நஞ்சுண்டன் இளைஞன்தான். முகத்தில் எந்தவிதமான உணர்ச்சிகளையும் வெளிப்படையாக அறிவிக்காத சலனமற்ற முகம். கண்ணா, கண்ணாடியா என்ற சந்தேகம் அவளுக்கு ஏற்பட்டது. பார்வை நிலைகுத்தி நின்றது.

"உட்காருங்கள்."

அவன் அவள் நாட்டு மொழியில் பேசினான். அவள் உட்கார்ந்தாள்.

"உங்களுக்கு என் மொழி நன்றாகத் தெரிந்திருக்கிறது. உச்சரிப்பிலிருந்து சொல்லுகிறேன்," என்றாள் அபூர்வா.

"அது பிரச்னையல்ல இப்பொழுது. என்னைப் பற்றி உங்களிடம் யார் சொன்னார்கள்?"

"அது பிரச்னையல்ல, நான் உங்கள் உதவியை நாடி வந்திருக்கிறேன்."

நஞ்சுண்டன் அவளைச் சில விநாடிகள் உற்றுப் பார்த்தான். புன்னகை செய்யலாமா வேண்டாமா என்ற ஒரு கண நேரத் தயக்கம். புன்னகை செய்து விட்டால், பனிப்பாறை உருகி விடுமோ என்ற கவலை.

"என்ன உதவி?"

"நான் ஃபோனில் சொன்னேனே, அப்பொழுது சிரித்தீர்கள், சிரிப்பு அழகாக இருந்தது. அல்லது நீங்கள் சிரிக்கவில்

---

மானேஜர் : ஃபைலைக் காணோம்னு சொல்றியே! எந்தப் ஃபைலைக் காணோம்?

சிப்பந்தி : என்னென்ன ஃபைலைக் காணோம்னு லிஸ்ட் போட்டுத் தயாரித்த ஃபைலைத்தான் சார்!

- எஸ். ராஜாராம்



''என் மனைவியை நாலு நாளா காணோம் சார்...!''

''இவ்வளவு நாட்கள் என்ன பண்ணி னீங்க?''

''ஷாப்பிங் போயிருப்பான்னு நினைச் சிட்டு இருந்தேன் சார்!''

- உதயா முருகானந்தம்

---

லையோ? ஃபோன் சிரித்திருக்கக்கூடும். இப்பொழுது உங்களைப் பார்த்தால், ஃபோன் தான் சிரித்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.''

புன்னகை மிகவும் வசீகரமான புன்னகை. பனிப்பாறை உருகத் தொடங்கி விட்டது.

''எங்கள் நாட்டைப் பற்றி ஏராளமான புத்தகங்கள் நூல் நிலையத்தில் உள்ளன. வரலாறு, புராணம், என்ன வேண்டும் உங்களுக்கு? எங்கள் தலைவரைப் பற்றியும் வந்திருக்கக்கூடிய நூல்களை அளவிட முடியாது. வரலாறு, புராணம்...''

''தலைவரைப் பற்றியுமா புராணம்?''

''புராணமில்லாமல் எப்படித் தலைவராக இருக்க முடியும்?''

''உதாரணம்?''

நஞ்சுண்டன் சிறிது நேரம் பேசாமலிருந்தான். பிறகு கேட்டான் : ''இன்று உங்களால் குளிக்க முடிந்ததே எப்படி?''

''குழாயில் தண்ணீர் வந்தது. குளித்தேன்.''

''எப்படி வந்தது?''

''புரியவில்லை...''

''பக்கத்து நாட்டுப் பகைவர்கள், எங்கள் ஆற்றைத் திருடிக் கொண்டு போய் மலையருகே ஒளித்து வைத்து விட்டார்கள். போர் தொடுக்க வேண்டுமென்று கொதித்தெழுந்தது எங்கள் மறவர் கூட்டம். ஆனால் எங்கள் தலைவர், நிதானத்தை இழக்காமல், 8640 விநாடிகள் உண்ணா நோன்பு மேற்கொண்டார். எங்கள் மக்கள் கூட்டம் கண்ணீர் விட்டு அரற்றியது. அவர்கள் கண்களின்றும் பெருக்கெடுத்தோடிய நீரே இன்று இந்நாட்டில் ஆறாக ஓடிக் கொண்டிருக்கிறது...'' என்றான் நஞ்சுண்டன்.

''அதுதான் பார்த்தேன்,'' என்றாள் அபூர்வா.

''என்ன பார்த்தீர்கள்?''

''தண்ணீர் உப்பாகக் கரிக்கிறது.''

நஞ்சுண்டன் மௌனமாக மறுபடியும் அவளை உற்றுப் பார்த்தான்.

அப்பார்வையின் பின்புலத்தில் புன்னகை ஒளிந்து கொண்டிருக்கிறதென்று அவளுக்குப் பட்டது.

''இன்னொரு விஷயம்,'' என்றாள் அபூர்வா. நஞ்சுண்டன் என்னவென்று கேட்கவில்லை. அவளைத் தொடர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

''வேதபுரத்துத் தலைவரின் விசுவாசம் மிக்க மக்கள், மறுபடியும் அழ வேண்டிய சந்தர்ப்பம் வந்து கொண்டிருக்கிறது போலிருக்கிறது.''

''ஏன்?''

''குழாயில் தண்ணீர் சொட்டு சொட்டாகத்தான் வருகிறது.''

''சரி.. என் நேரத்தை வீணடித்துக் கொண்டிருக்கிறீர்கள்,'' என்றான் நஞ்சுண்டன்.

''நான் தலைவரைப் பார்க்க வேண்டும்.. அண்ணாமலை மூலம் இன்னொருவரைப் பிடித்து, அவர் மூலம்..''

''யார் அண்ணாமலை?''

''இடக் குத்தகைக்காரர்.''

''அவரை இனி பார்க்க முடியாது.''

''ஏன்?''

''சிறையிலிருக்கிறார். அவர் தலைவருக்கு ஒரு சிலை வைத்தார் கடை வீதியில். சிலையின் மீது காகம் எச்சமிட்டு விட்டது. அந்தக் காகத்தைச் சிறை பிடிக்கும்படி அவருக்கு அரசாங்க உத்தரவு. அவர் சிறைபிடித்து வந்தார் ஒரு காகத்தை. அது அந்தக் காகமில்லை, என்று தெரிந்தது. ஏமாற்றியதற்காகச் சிறைத் தண்டனை...''

''எப்படித் தெரியும், அந்தக் காகமில்லையென்று?''

''எங்கள் ஆராய்ச்சிக் கூடத்தில் சிலையில் கண்ட எச்சமும், இந்தக் காகத்தின் எச்சமும் விஞ்ஞான ரீதியாக ஒப்பிட்டு ஆய்வு செய்யப்பட்டன. எச்சமிட்டது, அண்ணாமலை கொண்டு வந்த காகமில்லை என்று தெரிந்தது!''

''இப்பொழுது புரிகிறது,'' என்றாள் அபூர்வா.

''என்ன?''

''காகத்தால் அவ்வளவு உயரத்துக்குப் பறக்க முடியாது...''

புன்னகையைத் தவிர்க்க முடியவில்லை. புன்னகை செய்தவாறே ஒரு துண்டுக் காகிதத்தில் ஏதோ எழுதி அவளிடம் கொடுத்தார் நஞ்சுண்டன்.

''இது என் முகவரி. என்னை இங்கு நாளை இரவு எட்டு மணிக்குச் சந்தியுங்கள்.''

முகவரி எழுதப்பட்டிருந்தது.

(தொடரும்)

# குவைத் போகலாம் வாரீகளா?












பாவம் எங்களுக்காக குவைத்
போய் உழைச்சு உழைச்சு
ஓடாயிட்டீங்க...


இங்கேருந்து எதுவும்
கொண்டு போக
வேண்டாம் பாட்டி;
அங்க எல்லாமே
கிடைக்கும்.
அப்ப நீ போய்ச்
சேர்ந்ததும் எனக்குப்
பொருள் விளங்காய்
உருண்டையும்
வேப்பம்பூ பொடியும்
வாங்கி அனுப்பிடு...


வாரா வாரம் போன்ல
பேசிக்கறீங்களே...!
லெட்டர் வேற
எழுதுவியா...?
இது லெட்டர் இல்லை...
அங்கேருந்து வாங்கி-
யனுப்ப வேண்டிய
பொருட்களோட லிஸ்ட்-
போன்ல படிச்சுருவேன்!


என்னடா குவைத்ல
வேலைக்கு
அப்ளிக்கேஷன்
போட்டியே
என்ன ஆச்சு?
கிடைச்சுடும் போலிருக்கு,
ஆனா சதாம் உசேன்ங்கிற
என்னோட பெயரைக்
கண்டிப்பா மாத்திக்-
கணுமாம்,
கண்டிஷன் போடறாங்க!

குவைத் கதை 1

# சுமைகள்

வேணி

முருகையாவுக்குப் பிரமிப்பாக இருந்தது. ஏரோப்பிளேனை சினிமாவில் பார்த்திருக்கிறான். உள்ளே ஏறும் அனுபவம் கிடைத்தது சந்தோஷம். ஓர் அழகிய பெண்மணி வரவேற்றது சந்தோஷம். ஒரு பெண்மணி அழைத்துப் போய் அவன் இருக்கையில் உட்காரச் சொன்னாள். முதலில் ஜூஸ், சாக்லேட் வந்தது. எதற்கு செலவு என்று எடுக்கவில்லை. பிறகு ஓசி என்று தெரிந்தவுடன் வந்தது எதையும் விடவில்லை.

அவ்வப்போது ஆங்கிலத்திலும், ஹிந்தியிலும் ஏதோ சொல்லிக் கொண்டே வந்தார்கள். தான் பத்தாம் கிளாசிற்கு மேல் படிக்க முடியாமல் போனதற்கே இந்த ஆங்கிலம்தான் காரணம் என்பதில் முருகையாவிற்கு பயங்கர கோபம். பத்து வருட படிப்பில் "ஒன்ஸ் அப் ஆன் எ டைம்" தவிர எந்த வார்த்தையும் வாய்க்குள் நுழைந்ததில்லை.

படிப்பதற்குச் சிறு வயதில் ஏழு கிலோ மீட்டர் போக வேண்டும். சில சமயம் வண்டி கிடைக்கும். சில சமயம் அப்பா நடந்து போகச் சொல்லுவார். சில சமயம் நாய்க்கர் கிணற்றில் குளித்து விட்டு, மாங்காயை அடித்து விட்டு, சாயங்காலம் வந்து விடுவான். பிற்பாடு ஊருக்கு பஸ் வந்து விட்டது. ஏமாற்ற முடியாமல் போய் விட்டது. ஆனால் படிப்பு மட்டும் ஏறவேயில்லை. வள்ளியூரில் எல்லாம் பிடித்தது. பஸ் ஸ்டாண்ட், அதனருகில் கிடைக்கும் நுங்கு சர்பத், குன்றோடு கூடிய முருகன் கோவில், கலையரங்கத்தில் தொண்டை வரளப் பேசும் அரசியல்வாதிகளின் பேச்சு, சரஸ்வதி பவன் வடை... ஆனால் ஸ்கூல் பிடிக்கவில்லை. ஆசிரியர் பிடிக்கவில்லை. ஆங்கிலம் சுத்தமாகப் பிடிக்கவில்லை.

அப்பாவுக்குத் திடீரென்று விவசாயம் பிடிக்கவில்லை. வியாபாரத்தில் பணம் அள்ளலாம் என்று யாரோ சொன்னார்கள். அப்பா நிலத்தை விற்றார். வள்ளியூரில் கடை பிடித்தார்கள். "அருணகிரி ஆட்டோமொபைல்ஸ்" என்று பெயர் வைத்தார். சென்னையிலிருந்தும், திருநெல்வேலியிலிருந்தும் சரக்குகள் வந்து இறங்கின. ஜுராக கடைத் திறப்பு நடந்தது.

எல்லா சுகங்களும் தொடர்ந்து கொண்டே இருப்பதில்லை. வாழ்க்கையின் நிஜங்கள் கண் முன்னால் வந்து விடுகின்றன.

அப்பாவின் பிஸினஸ் விழுந்தது. "விலை அதிகம்" என்றார்கள். "அப்பாவிற்குப் பேச்சு பக்குவம் இல்லை" என்றார்கள். என்ன ஆச்சோ, அப்பா முழுமையாக நொடித்துப் போனார். விவசாயமே பார்த்துக் கொண்டிருந்திருக்கலாம் என்ற எண்ணத்திலேயே போய்ச் சேர்ந்தார். குடும்பச் செலவு, அப்பா வைத்திருந்த கடன், வீட்டின் அடமானம் எல்லாம் முருகையாவின் தலையில் இறங்கின.

முருகையா வேலைக்குப் போவது என்று முடிவெடுத்தான். திருநெல்வேலியில் எழுநூறு ரூபாய்க்கு வேலை கிடைத்தது. ஆயுசு பூரா வேலை பார்த்தாலும் கடனை அடைக்க முடியாது என்று புரிந்து போனது. கூடச் சம்பளம் கேட்டால் முதலாளி வேலையை விட்டுப் போகச் சொல்லிவிடுவாரோ என்று பயம் வந்தது.

நண்பன் ஜெயக்குமார் இருபத்தி ஐயாயிரம் ரூபாய் கட்டினால், குவைத்தில் வேலை கிடைக்கும் என்றான். யாரோ ஏஜெண்டிடம் கூட்டிப் போனான். ஏழாயிரம் சம்பளம் கிடைக்கும். ஓவர்டைம் பார்த்தால் பத்தாயிரத்திற்கு மேலே வரும் என்றார். ஊருக்கு ஏழாயிரம் அனுப்பலாம் என்றார்.

அம்மாவின் நகையை அடமானம் வைத்தான். பணத்தை கட்டிய பிறகு, ஏஜெண்ட் சாவகாசமாய்ச் சொன்னார். "திருவனந்தபுரத்திலிருந்து ஏர்-டிக்கெட் எடுக்க வேண்டும்" வீட்டிலிருந்த கடைசித் தங்கமும் அடமானக் கடைக்குப் போனது.

முருகையாவின் ஏரோப்ளேன் பயணம் இந்தப் பின்னணியில் அமைந்ததுதான்!

குவைத் வந்து இறங்கினான். ஏஜெண்ட்கள் வந்து கூட்டிப் போனார்கள். ஒரு நீள அறையில் பதினைந்து பேர் படுத்துக் கொண்டார்கள்.

வேலை கடினமாக இருந்தது. அனுபவித்திராத ஒரு வெயிலை அனுபவித்தான். வள்ளியூரின்

பன்னிரண்டு மணி வெயில் அங்கே எட்டு மணிக்கு அடித்தது. ஜூஸ் ஒன்று பத்து ரூபாய் என்று நினைக்கும்போதே ஜூஸ் குடிக் கவே மனசு வரவில்லை. குளிர்காலம் அதை விடக் கொடுமையாக இருந்தது. கையெல்லாம் விறைத்துப் போனது. உடம்பெல்லாம் துணி கட்டிக் கொண்டு வேலை செய்தான். சாயங்கால வேளைகளில் நாலு தமிழ் வீடுகளில் வீட்டு வேலை பார்த்தான்.

ஒண்ணாம் தேதி சம்பளம் வாங்கியவுடன், சாயங்காலமே ஊருக்குப் பணத்தை அனுப்பி விடுவான். நாட்கள் வேகமாக ஓடின. ஒன்றரை வருடங்கள் ஓடின. ஒரு மாதம் லீவ் தந்தார்கள். அதை லீவாக நினைக்கவில்லை. விடுதலையாக நினைத்தான். போதும் இந்த வாழ்க்கை. ஆசைக்கு அளவில்லை. கடன் அடைந்து சேமிப்பு இருக் கும். அதை வைத்து ஏதாவது பிசினஸ் ஆரம் பித்து செட்டிலாகி விட வேண்டும்.

கையிலிருந்த கொஞ்ச பணத்திலும் சாமான் கள் வாங்கினான். ஊருக்கு அனுப்பிய பணத் தைக் கணக்குப் பண்ணிப் பார்த்தான். கடன்கள் அடைந்திருக்கும். தங்கையின் கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்து விட வேண்டும். எனக்கும் வயதாகிக் கொண்டே போகிறது. போதுமிந்தத் தனிமை. கஷ்டப்பட்டதெல்லாம் போதும். எனக்கு அம்மா பெண் பார்த்திருப்பாளா? தங் கைக்கும் எனக்கும் ஒரே பந்தலில் திருமணம் வைக்கலாம். சிக்கனமாய். மனது கோட்டை கட்டியது.

திருவனந்தபுரம் ஏர்போர்ட்டில் இறங்கி வெளியே வரும் போது, தம்பி வரவேற்க நின்று கொண்டிருந்தான்.

தம்பி நன்றாக மாறியிருந்தான். ஸ்டை லாக டிரஸ் பண்ணியிருந்தான். கூட வந்த ஆளிடம், "அண்ணன் பெட்டியை எடுத்துக் கொண்டு, பஸ்ல வந்துடு. நானும், அண்ணனும் பைக்ல போயிடறோம்" என்று சொன்னான். கூட வந்த ஆள் பெட்டியை எடுத் துக் கொள்ள, முருகையா வண்டியில் ஏறினான்.



"யாரு வண்டிடா இது?"

"என் வண்டிதான். புது வண்டி. திருநெல்வேலியில் வாங்கினேன். முப்பது ரூபா. பத்து ரூபா கட்டியாச்சு. மிச்சம் மாசா மாசம் கட்ட ணும். அருமையான வண்டி. லிட்டருக்கு அறுபதுலேர்ந்து எழுபது வரை போகுது..." என்று தம்பி வண்டியைப் பற்றிப் பேசிக் கொண்டே வந்தான்.

வீட்டில் அம்மா ரொம்ப சந்தோஷ மாய் வரவேற்றாள். வீடு மாறியிருந்தது. வீட்டில டீவி, விசிஆர். இருந்தது. சமைய லறையில் சின்னதாய் ஒரு பிரிட்ஜ் இருந்தது. தங்கையின் ரூமில் டிரஸ்ஸிங் டேபிள் முளைத்தி ருந்தது. அதில் விதவிதமாய் பவுடர்கள், கிரீம் வகைகள்...

முருகையா குளித்து விட்டு வந்தான். அம்மா அவனுக்குப் பிடித்த முள்ளங்கி சாம் பார், சேமியா பாயசம் பண்ணியிருந்தாள். சாப் பிட்டுக் கொண்டிருக்கும் போது, "தம்பி சாப் பிடறீங்களா?" என்றபடி நமச்சிவாயம் வந்தார்

## வனவளம்!



●● மரங்கள் பொதுவாக 100 முதல் 200 ஆண்டுகள் உயிர் வாழ்கின்றன.

●● தானியப் பயிர்களை விட பழ மரங்கள் ஆண்டுக்கு 5 முதல் 10 மடங்கு அதிக பலன் கொடுக்கின்றன.

●● கி.பி. 2000 ஆண்டில் இந்தியாவின் விறகுத் தேவை 182 மில்லியன் கன அடி. ஆண்டு தோறும் குறையும் வனத்தின் அளவு 3.7 மில்லியன் கன அடி. ஒவ்வொரு ஆண்டும் ஏறக்குறைய 5% வனம் அழிக்கப்படுகிறது.

●● இந்தியாவில் உள்ள 152 மில்லியன் ஹெக்டேர் பயிரிடப் படும் நிலத்திலிருந்து ஆண்டு ஒன்றுக்கு 4700 மில்லியன் டன் மணல் இழப்பு ஏற்படுகிறது. இதில் கங்கை நதி மட்டும் ஆண்டிற்கு 1500 மில்லியன் டன் மண்ணை அடித்துச் செல் கிறது.

●● இந்தியாவிலேயே நீர் மட்டம் (water level) வெகு விரை வாகக் குறைந்து வரும் மாநிலம் தமிழ்நாடு.

- குவைத் - கொட்டு முரசே கையெழுத்துப் பிரதியிலிருந்து தொகுப்பு : என். சுப்பராமன்

### மனித இனம்!

நரியினமே மனிதன்!
நாிளொருநல் நடிப்பால்!
வரியினமே மனிதன்!
வரிக்குவரி வாங்க!

குயிலினமே குழந்தை!
குவாக்குவா பாடும்!
தீயினமே காதல்!
தீயெனவே பற்றும்!
- ஆர். பிருந்தா, குவைத்



"உங்க பையன் இங்கி லீஷ்ல ரொம்ப வீக்கா இருக்காங்க. காரட்டுக்கு இங்கிலீஷ் பேர் கேட்டா தெரியாதுன்றான்!"

- ஜே. கே. அமாரா

- வீட்டின் மேல் கடன் கொடுத்திருப்பவர்.

"வாங்க. வாங்க. இந்த மாதம் தம்பி வந்த தால் செலவு அதிகம். அடுத்த மாதம் சேர்த்துத் தர்றேனே!" என்றாள் அம்மா.

"நான் என்ன வட்டி வாங்கவா வந்தி ருக்கேன். தம்பி வந்திருக்கே! பார்த்துட்டுப் போலாம்னு வந்தேன்" என்று நாசுக்காய்ச் சொல்லி, பாயசத்தைக் குடித்து விட்டுப் போய் விட்டார். இவரே முன்பு, 'இரண்டு மாசத்தில பணம் வரலேன்னா, சட்டி, பொட்டியை வெளியே எறிந்து விடுவேன்' என்று கத்தியது இப்போது ஞாபகம் வந்தது.

"என்னம்மா, இவர் கடனை முடிக்கலியா?" என்று முருகையா கேட்டான்.

"எங்கடா முடியுது... நீதான் பாக்கறியே... செலவு என்ன ஆயிருக்குன்னு. வட்டி மட்டும் ஒழுங்கா கட்டிக்கிட்டிருக்கேன். இனி மூனு வட்டிக்கு யார் கொடுப்பா சொல்லு? தங்கச்சி ஏதோ துணி துவைக்கிற மெஷின் வேணுமங்கிறா. அதை வாங்கின பிறகு இவர் அசலையும் கொஞ்சம் கொஞ்சமாக அடைக்கணும். நீ திரும்பப் போய் சம்பா தித்து அனுப்பும் பணத்தை வைத்து நிச்சய மாய் அடைத்து விடலாம். நீ எத்தனை நாளில் குவைத் திரும்ப வேண்டும்?" என்று கேட்டாள்.

அவன் பதில் சொல்லவில்லை. சொல்ல முடியவில்லை. அவனது கனவுகள் அந்த நொடி யில் கரைந்து போயின.

We accept Fixed Deposits at the rate of 24% with incentives

# காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின்

26.6.94 அன்று நடைபெற்ற 13-வது குலுக்கலில்

## வீடுகள் பெற்ற அதிர்ஷ்டசாலிகளை

காசி பில்டர்ஸ் நிறுவனம் வாழ்த்துகிறது!

ரூ. 3 லட்சம் மதிப்புள்ள வீடு ரூ. 3000/- 'ப' குரூப்



G. Sureshkumar, 255, Thambuchetty Street, 2nd Floor, Madras - 1.

ரூ. 2½ லட்சம் மதிப்புள்ள வீடு ரூ. 2,500/- 'ப' குரூப்



Mrs. S. Jansi, No. 778, G.S.T. Road, Tambaram, Madras - 45.

ரூ.2½ லட்சம் மதிப்புள்ள வீடு ரூ. 2,500/- 'பி' குரூப்



Dr. G. Vijayakumar, 62/G1, Gokul Flats, Lake View Road, Madras - 33.

ரூ.2 லட்சம் மதிப்புள்ள வீடு ரூ. 2,000/- 'பி' குரூப்



R. Chithra, W/o. S. Ravi Kumar, No. 2, Rajah Annamalai Road, Purasawalkam, Ms. - 7.

ரூ.1½ லட்சம் மதிப்புள்ள வீடு ரூ. 1,500/- 'ப' குரூப்



T.S. Lalitha, 13, Sundararama Colony, 115, Kothandaram, Ist St., Madras - 21.

ரூ.1½ லட்சம் மதிப்புள்ள வீடு ரூ. 1,500/- 'பி' குரூப்



Mrs. Vasantharamani, B-4, Amudam Colony, South Boag Road, T.Nagar, Madras - 17.

ரூ.1½ லட்சம் மதிப்புள்ள வீடு ரூ. 1,500/- 'பி' குரூப்



K.B. Manickavelu, No. 3, Perumal Koil Street, Saidapet, Madras - 15.

ரூ.1¼ லட்சம் மதிப்புள்ள வீடு ரூ. 1,250/- 'ப' குரூப்



R. Nagarajan, 1, Sathyamoorthy Street, Gandhi Nagar, Saligramam, Madras - 93.

ரூ.1 லட்சம் மதிப்புள்ள வீடு ரூ. 1,000/- குரூப்



I.M. Hutton, No. 21, Flower Street, Saidapet, Madras - 15.

இத்திட்டத்தில் ரூ. 1,250/- முதல் ரூ. 5,000/- வரை வாடகை போல செலுத்தி குலுக்கல் மூலம் 277 சதுரடி முதல் 1111 சதுரடிகள் வரை சொந்த வீடு பெறலாம்.

வீடு கிடைக்கும் இடங்கள் : சென்னை கே.கே. நகர் மேற்கு, வளசரவாக்கம், சாலிகிராமம், குமரன் காலனி, வடபழனி, கில்நகர் ஆகிய இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

மேலும் விவரங்களுக்கு :

காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிமிடெட்

மற்றும்

காசி பில்டர்ஸ்

காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ்,

91, 92 ஜவாஹர்லால் நேரு சாலை, அசோக் நகர், சென்னை - 600 095.

போன் : 4821969, 4822206 ஞாயிறு முழு நேரம் அலுவலகம் உண்டு.

FAX : 044-4821897



# சுவையான இல்லறத்திற்கு இவையும் வேண்டும்!

ஆம். இனிமையான இல்லறத்திற்கு
அன்பு, அரவணைப்பு, பரஸ்பரம்
புரிந்துகொள்ளுதல்-இப்படி
உளம்சார்ந்த விஷயங்கள்
மட்டும்தானா? உணவுசார்ந்த,
அம்சங்களும் உள்ளனவே!

SMB ரவா, மைதா, கோதுமை
மாவுகளில் பூரி, கேக், பப்ஸ்,
உப்புமா, பிரெட், ரவா இட்லி, ரவா
லட்டு என்று விதவிதமாகச்
சமைத்திடுங்கள். இனிய
குடும்பவாழ்வுக்கு சுவையான
அடித்தளம் அமைத்திடுங்கள்.

இப்பொழுது
பரிசோதிக்கப்பட்டு
நிரூபணமான கூடுதல்
தரத்துடன் கிடைக்கிறது.

---

SMB மைதா, ரவை, கோதுமை
மாவுகள்
1 கிலோ, ½ கிலோ பாலிதீன்
பாக்கெட்டுகளில் கிடைக்கிறது.

---




**சக்தி முருகன் ரோலர் பிளவர்
மில்ஸ் (பி) லிட்.**

தபால் பெட்டி எண். 15, அவினாசி - 638 654,
கோயமுத்தூர் மாவட்டம். போன்: 2991, 2992



**தரமென்றால் இதுதான் தரம். சுவையென்றால் இதுதான் சுவை**

SASI / 509 / 94

# தனிமைக் கீதங்கள்



தென்றலுக் கென்ன, மெல்ல
தேகத்தில் நாடி பார்க்கும்;
திங்களுக் கென்ன, சன்னல்
திறப்புக்குள் முகத்தைக் காட்டும்;
கண்களுக் கென்ன, வண்ணக்
கனவுக்கு மேடை போடும்;
பெண் மனம் மட்டும் காதல்
பிரிவினில் நெருப்பாய் வேகும்!

பொருள் மிகச் சேர்ப்பதற்குப்
புறப்பட்டுப் போனார்; நானோ
இருளுக்குத் துணையாய் இங்கே
இரவெலாம் விழித்துச் சோர்வேன்!
'உருவத்தில் வாட்ட மென்ன?'-
ஊராரும் கேட்கின்றார்கள்!
பருவத்துக் கொடிதான் சுற்றிப்
படர்ந்திடத் துணை வேண்டாமோ!

இந்நாட்டில் பிறந்தோ ரெல்லாம்
இங்கேயே பிழைப் பதற்கு
எந்நாளில் வழி பிறக்கும்?
எப்போது ஒளி பிறக்கும்?
அந்நாளே அவரைப் போல
அயல் நாட்டில் உழைப்போ ரெல்லாம்
தம்நாடு திரும்ப நேரும்
தனி மாதர் தவிப்பும் தீரும்!

- குமரி அமுதன்

சதாம் குவைத்தை ஆக்ரமித்ததும், அதன் பின்பு பலாயிரக் கணக்கான ஜனங்கள் அனுபவித்த தொல்லைகளும், ஆயுசு உள்ள வரை அவர்களால் மறக்க முடியாதவை. போர் மூண்ட அந்த நாட்களை நேரில் கண்ட இவர்கள் இங்கே நினைவு கூர்கிறார்கள்...

**மணி :** ஆகஸ்ட் 2 - 1990. டாக்டர் துரைசாமி எனக்கு ஃபோன் பண்ணி, "எனக்கு இன்று ஒரு முக்கிய அலுவல் இருப்பதால் இன்றைய நமது மீட்டிங்கை தள்ளிப் போடுங்கள்!" என்று சொல்லி வைக்கிறார்.

மறுபடியும் ஃபோன்!

இப்போது நண்பர் வாசு! "விஷயம் தெரியுமா...?" என்கிறார். "ஓ... தெரியுமே! மீட்டிங் தள்ளிப் போயிற்று. அதுதானே!" என்கிறேன்.

"அதில்லை. ஈராக் ராணுவம் குவைத்தை ஆக்ரமித்து விட்டது!" என்கிறார்.

அதிர்ச்சியில் நான் உறைந்து போகிறேன். என்ன நடக்குமோ என்று இனம்புரியாத கலக்கம். குடும்பத்தினருக்கெல்லாம் பயம். அதன் பின்பு மாற்றி மாற்றி போன்கால்கள்!

கவலைகள்! அழுகைச் சிதறல்கள்! ஒருவருக்கொருவர் ஆறுதல்கள்!

முதல் காரிய

• எரியும் எண்ணெய்




• குவைத், அமீர் தலைமையில் கடைசி எண்ணெய்க் கிணறு அணைக்கப்படுகிறது...

ப் பலசரக்குக் கடைக்கு ஓடி சாப்
டுக்குத் தேவையானதைச் சேமித்து
த்தேன்.

அலுவலகங்கள் எல்லாம் ஸ்தம்
து விட்டன. அனைத்துச் சாலைகளி
, தெருக்களிலும் ராணுவம்! என்
டுக் கதவு தட்டப்பட்டது.
இராணுவ கேப்டன்!
ங்கள் வீடு



## ந்த நாட்கள்!

கடற்கரைக்குச் சமீபமாக இருப்பதால் ஏவுகணைகள் தாக்கும் அபாயம் உள்ளது. ஆகையால் உடனே வேறிடத்திற்கு மாறுங்கள்!" என்று த்தரவிடுகிறார்.

அரக்கப் பரக்க, எங்கள் உடைமைகளை ல்லாம் போட்டு விட்டு, வாகவின் இல்லத்திற்குப் போய் அடைக்கலமானோம். அங்கேயும் நிம்மதி ல்லை.

அவருடைய வீட்டைச் சுற்றியிருந்த காலி இடங் ளில் ஈராக் ராணுவத்தினர் கண்ணி வெடிகளை

• எண்ணெய்க் கசிவினால் உருவான எண்ணெய் ஏரி

வைத்து விட அங்கிருந்து, வாக, ரகுராமன் குடும்பத்துடன் திரும்ப எங்கள் வீட்டிற்கு ஓடினோம்!

அதன் பிறகு கடந்த நாட்களில் சட்டம் ஒழுங்கு சீர்குலைந்தது. திருடு - கொள்ளை அதிகரித்தது. அகப்பட்ட வரை சுருட்டும் நோக்கில் பலரும் வீடுகளில் புகுந்து கொள்ளையடித்தனர். இன்னதுதான் நடக்கிறது - அல்லது நடக்கும் என்று யூகிக்க முடியாத அளவுக்கு நாட்கள் ஊர்ந்தன. உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு காலத்தை ஓட்டினோம்.

போர் மூண்ட நாற்பது நாட்களுக்குப் பிறகு, நாங்கள் 40 பேர் ஒரு குழுவாக பஸ் பிடித்து பாக்தாத் பயணமானோம். வழியில் ஏகப்பட்ட சோதனைகளைத் தாண்டி பாக்தாத் போய்ச் சேர்ந்தோம்.

ஆயிரம் வசதிகள் இருந்தும், சொகுசாய் வாழ்ந்தும், அன்று நாங்கள் நடுரோட்டில்! பெண்கள், குழந்தைகள், கர்ப்பமாயிருந்த என் மனைவி என எல்லோருமே அதோகதியில்!

பிறகு ஏதோ ஒரு ஹோட்டலில் இடம் கிடைத்து, கையிலிருந்த டாலர்களையெல்லாம் அவர்களுக்கு அழுது... (அந்தச் சமயம் பாங்குகள் செயல்படவில்லை) ஒருவழியாக அம்மான் விமான தளத்தை அடைந்த பின்புதான் நிம்மதி!

• முத்துகிருஷ்ணன்



• மணி



• ஸ்ரீதர்



ஏர் இந்தியா அதிகாரிகளும், இந்திய தூதரக அதிகாரிகளும் தகுந்த ஏற்பாடுகளைச் செய்து எங்களை இந்தியாவிற்கு அனுப்பினர். தினமும் 13 விமானங்கள், ஏர் இந்தியாவின் அந்த சேவை சரித்திரத்தில் இடம்பெறத் தக்கது.

பம்பாயில் இறங்கியதும் இந்திய அரசு வழிச் செலவுக்குப் பணமும் சாப்பாடும், இலவச ரயில் டிக்கெட்டும் கொடுத்து எங்களை வழியனுப்பி வைத்ததை மறக்கவே முடியாது. அதுவரை தேக்கி வைத்திருந்த துக்கமெல்லாம் தாய் மண்ணை மிதித்ததும் கண்ணீராய்க் கொட்டிற்று. அதன் பின்புதான் எங்களுக்கு ஆசுவாசம்!

**முத்துகிருஷ்ணன்** : நாங்கள் தங்கியிருந்த ப்ளாட் மாதிரியான பில்டிங்கில் அமெரிக்கர், பிரிட்டிஷ்காரர்கள் மற்றும் குவைத்தியினர் சிலரும் இருந்தனர். அதை மோப்பம் பிடித்த ஈராக்கினர் - என்னை வீட்டிலிருந்து வெளியே அழைத்தனர். பயந்தபடியே வெளியே வந்தேன்.

உடன் என் நெற்றிப் பொட்டில் துப்பாக்கியை அழுத்தி, "நீ இந்தியனா? இந்தியர்களை நாங்கள் ஒன்றும் செய்ய மாட்டோம். இங்கு எந்தெந்த வீடுகளில் அமெரிக்கர்களும் பிரிட்டிஷாரும் உள்ளனர், காட்டு!" என்று துப்பாக்கி முனையில் நடத்திப் போயினர்.

அங்கு அப்போது ஐந்து அமெரிக்கக் குடும்பங்களும் மூன்று பிரிட்டிஷ் குடும்பங்களும் இருந்தன. எல்லோருமே எங்களுக்கு நண்பர்கள். எப்படி அவர்களைக் காட்டிக் கொடுக்க முடியும்? எனது வீட்டினருக்குச் சைகை செய்து, அவர்களுக்கு போனில் தகவல் சொல்லச் சொல்லி விட்டு, ஒரு தந்திரம் செய்தேன்.

இவர்களை உடனே அழைத்துப் போகக் கூடாது. தாமதிக்க வேண்டும்!

"லிஃப்ட்டில் போனால் அவர்கள் படிவழி தப்பித்து விடக்கூடும். மாடிப்படி வழியே ஏறலாம்!" என்று கூறி துப்பாக்கி முனை உந்திய போதிலும் மெல்ல மெல்ல அவர்களை அழைத்துப் போனேன்.

அந்த அவகாசத்தில் பலரும் தப்பிக்க முடிந்தது. என்னை வீடு வீடாய் அழைத்துப் போய் பெல்லடிக்கச் செய்து, உள்ளே இருப்பவரைப் பரிசோதித்தனர்.

எவ்வளவோ தாமதமாக்கியும் கூட ஒரு அமெரிக்கக் குடும்பமும் பிரிட்டிஷ் குடும்பம் ஒன்றும் தப்பிக்க முடியாமல் அவர்களின் பிடியில் சிக்கிக் கொள்ள நேரிட்டது. (சிக்கினவரின் கதி என்னாயிற்று என்று பிறகு தெரியவில்லை.)

இந்தியாவுக்குத் தப்பிப் போன நண்பர்களெல்லாம், "ஐயோ! எங்கள் நகை நட்டுகளையும் விலை உயர்ந்த பொருட்களையும் விட்டு விட்டு வந்து விட்டோமே..." என்று வருந்தினர். "பொருட்கள் போனால் போகட்டும். நகைகளை மட்டுமாவது எப்படியாவது எடுத்து வாருங்கள்!" என்று கெஞ்சினர்.

நான் நண்பர்களின் வீடுகளில் அலசி, நகைகளை இடுப்பில் பெல்ட் போல கட்டி ஊருக்குக் கொண்டு போய்ச் சேர்த்தது மறக்க முடியாத அனுபவம்.

**ஸ்ரீதர்** : போர் முடிந்து ஈராக்கியர் வெளியேறும் போது (24.2.91ல்) ஆங்காங்கே கண்ணி வெடிகளைப் புதைத்து எண்ணெய்க் கிணறுகளை எரிய விட்டனர். 742 கிணறுகள் எரிய ஆரம்பித்தன. ஒரே புகைமூட்டம். அந்த நாட்களில் சூரியனே தெரியவில்லை. இந்தக் கிணறுகள் எரிந்த புகையால் குவைத்தின் சீதோஷ்ணநிலையே மாறிப் போயிற்று.

இந்தக் கிணறுகள் மூன்று வருடங்களுக்கு எரிந்து குவைத்தின் எண்ணெய்வளமே அழிந்து போகும் என உலக நாடுகள் கணித்தன. ஆனால் அமெரிக்க, பிரிட்டிஷ், ஈரானிய, ஐரோப்பிய, தீயணைக்கும் படைகளைக் கொண்டு வந்து, மூன்றே மாதத்தில் அணைத்துச் சாதனை புரிந்தன மினிஸ்ட்ரி ஆஃப் ஆயில், KPC, KOC போன்ற கம்பெனிகள். இதில் குவைத் ஆயில் கம்பெனியின் செயல்பாடு அபாரமானது. சண்டை முடிந்த 20 நாட்களிலேயே KOC திரும்ப 'டிரில்' பண்ணி எண்ணெய் எடுக்க ஆரம்பித்து விட்டது!"

பேட்டி : **ஈரோடு ராமசாமி**

புகைப்படங்கள் - நன்றி :
**Information Department, KOC.**

---

**சுயநலம்!**

இந்தி எதிர்ப்பால்
விமான மறியல்
ரயில் மறியல்
பஸ் மறியல்
லாரி மறியல்
முடித்து வீட்டிற்குள் சென்ற
அரசியல் தொண்டரிடம்
மனைவி கேட்டாள் :
இந்தி அர்த்தால் லே
கித்தனா குப்பியா மிலா?

- அ. புதூர் சி. செல்வம், குவைத்



# வசதி, பாதுகாப்பு, நம்பிக்கை ஆகியவை வாழ்வில் இடம் பெற... வழிகாட்டுகிறது எல்டிசி.



## பென்ஷனர் பெனிஃபிட் திட்டம்

பாதுகாப்புப் பெறுவது உங்கள் பணம் மட்டுமல்ல. உங்களுடைய மன அமைதியும் கூட.

வயது 60 கடந்தால் என்ன? அதன் பின்னரும் நீங்கள் மன நிறைவோடு வாழ முடியும். அதற்கு உதவியாக இதோ ஒரு சிறப்பு டெபாசிட் திட்டம் — முதியவர்களுக்கு மட்டும். இத்திட்டத்தின் மூலம் ஒரு டெபாசிட்தாரர் என்கிற முறையில் நீங்கள் மாதாமாதம் ஒரு நிலையான உயர் வருமானத்தைப் பெறுகிறீர்கள். இதற்கான வட்டி வாரண்டுகள் பின் தேதியிடப் பட்டு முன்னதாகவே உங்களுக்கு அளிக்கப்பட்டு விடுகின்றன.

எனவே, கவலைகளிலிருந்து விடுபட்டு நீங்கள் மன நிறைவையும் அமைதியையும் நிச்சயமாகப் பெற முடிகிறது.

உங்கள் வளமைக்கு வழிகாட்டும் ஐந்து வெவ்வேறு டெபாசிட் திட்டங்களை லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ் லிமிடெட் உங்களுக்கு அளிக்கிறது: ஃபிக்சட் டெபாசிட், குமுலேடிவ் டெபாசிட், ரொக்க சர்ட்டிஃபிகேட், ரெக்கரிங் டெபாசிட், பென்ஷனர் பெனிஃபிட் திட்டம்... ஒவ்வொரு டெபாசிட்தாரரும் இத்திட்டங்களின் மூலம் பெறுவது: சிறப்பான பலன்கள், தனிப்பட்ட சேவை.

எல்டிசியின் டெபாசிட் தொகைகள் 1993-94ல், ஒரே ஆண்டில் 100% வளர்ச்சி கண்டுள்ளதற்கு இவைதான் காரணம். இந்த வெற்றியினால் ஊக்குவிக்கப்பட்டு எல்டிசி மற்றுமொரு லட்சியத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறது: 31 மார்ச் 1995 அன்று அடைய நிர்ணயித்துள்ள டெபாசிட் தொகை இலக்கு ரூ.35 கோடி.

பி.ஜி. சரவணன்
சேர்மன்

**டெபாசிட்டுகள் ஏற்கப்படுகின்றன!**



**லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ் லிமிடெட்**

கார்ப்பொரேட் அலுவலகம்:
37/1, கதீட்ரல் சாலை,
ஸ்டெல்லா மேரிஸ் கல்லூரி எதிரில்
சென்னை 600 086.
தொ.பே: 8281826/8281930

**கிளைகள்:** சென்னை • அம்பத்தூர், போன்: 681860 • அண்ணா நகர், போன்: 6212047 • குரோம்பேட்டை, போன்: 401267 • கே.கே. நகர், போன்: 4833917 • மடிப்பாக்கம், போன்: 2346586 • நங்கநல்லூர், போன்: 2348593 & 2346066 • விருகம்பாக்கம், போன்: 4830846 • மேற்கு மாம்பலம், போன்: 4830150 • திருச்சி, போன்: 25323 • மதுரை, போன்: 30626 • கோயம்புத்தூர், போன்: 43576 • திருநெல்வேலி, போன்: 322073 • காரைக்குடி, போன்: 2023 • வேலூர், போன்: 21902 • பாண்டிச்சேரி, போன்: 31859 • பெங்களூர், போன்: 366433.

***எல்டிசி: உங்கள் வாழ்வின் வளமைக்குப் பொன்னான பாதை.***

10.3.94 தேதியிட்ட தமிழ் நாளிதழில் வெளியான 25.10.93 தேதியிட்ட சட்ட பூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சி.

ADWAVE/LTC/4729 TAM A

# 6

அன்று நடைபெறவிருந்த ரகசியக் கூட்டத்தைப் போலீஸ் கெடுபிடி இருந்ததால் ரத்து செய்து விடுவதாகத் தீர்மானித்தார் ராமசாமி. தம் வீட்டுக்கு வந்து சோதனை யிட்டவர்களுக்கு வேறு ஏதும் தகவல்களும் கிடைத்திருக்கலாம் அல்லவா? எனவே கூட்டத்துக்கு வருவதற்கு இருந்தவர்களின் வீடுகளுக்குச் சென்று, அது ரத்தாகிவிட்ட செய்தியைத் தெரிவித்து விட்டு அஞ்சனா தேவியுடன் காரில் ராமசாமி தம் வீட்டு வாசலில் இறங்கிக் கொண்டார். அப்போது சாப்பாட்டு நேரம் ஆகி விட்டிருந்தது. கங்காதரன் தானும் காரில் வர ஆசைப்பட்டுச் சிணுங்கியதால் அவனையும் அழைத்துச் சென்றிருந்தார்கள். மணவாளன் வழியிலேயே தம் வீட்டில் இறங்கி இருந்தார்.

அஞ்சனாவுக்கு நன்றி தெரிவித்த ராமசாமி, "மணி பன்னண்டாயிடுத்து. நம்மாத்துல இன்னிக்கு சாப்பிட்டுட்டுப் போகலாமே?" என்று உபசரித்தார்.

## மணிக்கொடி

"நம்மாத்துல சாப்பிடறதுக்கு என்ன, சார்? இன்னொரு நாள் பார்த்துக்கலாம். எங்காத்துல எங்கம்மாவும் அப்பாவும் காத்திண்டுருப்பா. அடுத்து எப்ப பார்க்கிறது?"

"உங்க சவுகரியம் போல. சில சனிக்கிழமைகள்ள ஸ்கூல் இருக்கும். ஞாயித்துக்கிழமைகள்ள கட்டாயம் வீட்டிலதான் இருப்பேன். ஆனா காலம்பற எட்டு மணிக்குள்ள என்னைச் சந்திக்கிறது நல்லது. ஏன்னா மீட்டிங் ஏதாவது இருந்தா நான் வெளியில போயிடுவேன். இல்லாட்டா, மணவாளன் வீட்டுக்குப் போயிடுவேன். அதான்."

"ஆத்துல உங்க மிஸஸ் கிட்டவும் அக்கா கிட்டவும் சொல்லிடறேளா, நான் போயிட்டு வர்றேன்னு சொன்னதா?"

"இறங்கி வந்துதான் சொல்லிக்கிறது."

"இறங்கினா வம்பு, சார். அப்புறம் சாப்பிடச் சொல்லிக் கட்டாயப்படுத்துவேள்.. வேணாம், நீங்களே சொல்லிடுங்கோ.."

"சரி, உன் அப்பாகிட்டே என் நமஸ்காரம் சொல்லு. ராஜாராமன் ரொம்பப் பிரபலமான வக்கீல். அவரைப் பற்றி நிறைய கேள்விப்பட்டிருக்கேம்மா. ரொம்ப சந்தோஷம். நானே ஒரு நாள் உங்க வீட்டுக்கு வந்து உங்கப்பாவைச் சந்திக்கிறேன்..."

"கட்டாயம் வாங்க, சார்!" என்று அஞ்சனாதேவி காரைக் கிளப்பினாள்.

விசாலம் பிறகு சாப்பிடுவதாய்ச் சொல்லவே, கணவனுக்கும் குழந்தைக்கும் குஞ்சம்மா பரிமாறத் தொடங்கினாள்.

"அந்தப் பொண்ணு என்ன ஜாதி? நம்பளவாளா?" என்று ஊஞ்சலை ஆட்டியபடி அதில் உட்கார்ந்திருந்த விசாலம் தயக்கத்துடன் வினவினாள்.

"இதெல்லாம் அநாகரிகமான கேள்விகள், அக்கா. இந்த வழக்கத்தையெல்லாம் நாம திருத்தணும். நமக்குள்ள ஆயிரம் ஜாதிகளையும் பேதங்களையும் வச்சுண்டு அலையறதுனாலதான் வெள்ளைக்காரனுக்கு நம்மை அடிமைப்படுத்தறது சுலபமாப் போச்சு."

"ஜாதின்னா என்னப்பா?"

"இது மாதிரி எல்லாருமே கேக்கற ஒரு காலம் வரணும், கங்காதரா! மியூசியத்துல வைக்கிற பழம்பொருள் மாதிரி ஜாதிங்கிற இந்த வார்த்தையும் பழக்கத்துல இல்லாத ஒண்ணா மாறணும். அப்பதான் இந்த நாடு உருப்படும்."

"ரொம்பப் பணக்காரா போலிருக்கு. அதான் மோட்டார் கார் வெச்சிண்டிருக்கா. பொண்களே மோட்டார் கார் ஓட்டத் தொடங்கியாச்சு. கலி முத்திப் போச்சு."

"ஏங்க்கா பொண்ணுகள் சாரத்தியம் பண்றது ஒரு அதிசயமா? கைகேயி, அல்லி இவாள்ளாம் தேரோட்டல்லையா? அவா புராண காலத்தைச் சேர்ந்தவா, தேர் ஓட்டினா, இவா கார் ஓட்றா!"

"ஆமா, தைரியமான பொண்ணு. எதுக்கும் துணிஞ்ச கட்டைன்னு தோண்றது."

"அப்படின்னா?"

"அசலாத்துப் புருஷாளை மோட்டார்ல ஏத்திண்டு தானே அதைத் தெருத் தெருவா ஓட்டிண்டும் போகணும்னா அவ தைரிய சாலிப் பொண்ணாத்தானே இருக்கணும்?"

"தைரியசாலிங்கறதுக்கும் எதுக்கும் துணிஞ்ச கட்டைங்கிறதுக்கும் வித்தியாசம் இல்லியா? ஊராளாத்துப் பொண்களைப் பத்தி வாய்க்கு வந்ததைப் பேசக் கூடாதுக்கா. நீயும் ஒரு பொண்ணுங்கிற ஞாபகத்தோட பேசு."



"எதையும் நீ தப்பாவே எடுத்துக்கறே, ராமசாமி!"

"எதையும் நீ தப்பான கண்ணோடதான் பார்க்கறேக்கா. முன்ன பின்ன தெரியாதவாளைப் பத்தி - அது ஆம்பளையோ, பொண்ணோ - இப்படியெல்லாம் நாக்குல பல்லைப் போட்டுப் பேசப்படாது."

"அய்யோ, அய்யோ. சாப்பிடற சமயத்துல எதுக்கு இந்த வேண்டாத வாக்குவாதம்? அக்கா ஏதோ தெரியாத்தனமாகக் கேட்டுட்டா. விடுங்கோ அத்தோட."

ஜோதிர்லதா கிரிஜா

விசாலத்தின் கண்கள் கலங்கின. கணவனை இழந்து கைம்பெண்ணாகத் தன்னிடம் வந்து சேர்ந்து விட்ட அக்காவைக் கடிந்து ராமசாமி பேசியதே இல்லை. இன்று எப்படியோ சொற்கள் தடித்து விட்டன. எதிரே வந்து நின்ற குஞ்சம்மா விசாலத்துக்கு அழுகை வரப் பார்ப்பதாகச் சாடையால் அவருக்கு உணர்த்தினாள்.

அதன் பிறகு அங்கு யாரும் கொஞ்ச நேரம் வாயே திறக்கவில்லை. எனினும் கனத்த அந்த மௌனத்துக்குப் பின்னால் அவரவர் எண்ணங்களின் திண்மையால் ஒரு மனக்கசப்பு நிலவியது.

சாப்பிட்டு முடித்து, வேட்டி ஓரத்தில் கையைத் துடைத்தபடி ராமசாமி வந்ததும், விசாலம் ஊஞ்சலை விட்டு இறங்கினாள்.

"கோவிச்சுக்காதேக்கா. அது தைரியசாலிப் பொண்ணுதான். இனி அந்தப் பொண்ணும் அவ

ளோட சில சிநேகிதிகளும் அடிக்கடி நம் மாத்துக்கு வருவா. வெள்ளைக்காரானுக்கு எதிரா நாங்க நடத்திண்டிருக்கிற ரகசியப் போராட்டத்துல அவாளும் இனிமே கலந்துப்பா. நீயும் குஞ்சம்மாவும் நாலு எழுத்துப் படிச்சிருந்தா இப்படியெல்லாம் பேச மாட்டேள்."

"தெரியாத்தனமாப் பேசிண்டேண் டாப்பா... விடு," என்ற விசாலம் அகன்றாள்.

ராமசாமி உண்ட மயக்கத்துடன் இலேசாய்க் கண்ணயரத் தொடங்க, கங்காதரன் இரண்டு தரம் அவரை எழுப்ப முயன்று தோற்று, குஞ்சம்மா கோபித்துக் கொண்டதும் ஊஞ்சலை விட்டு மெல்ல இறங்கினான்...

..சமையற்கட்டில் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்த குஞ்சம்மாவும் விசாலமும் ராமசாமியின் மெல்லிய குறட்டையொலி கேட்கத் தொடங்கியதும் சற்றே மன இறுக்கம் குறையப் பெற்றார்கள்.

"அந்தப் பொண்ணை ஏதோ ஒரு வார்த்தை சொன்னதுக்கு என்ன கோவம் வருது பாரேன் இவனுக்கு" என்று ஆரம்பித்தாள் விசாலம்.

"படிச்ச பொண்ணு. தாட்பூட்னு இங்கிலீஷ்ல பேசத் தெரிஞ்சவ. நீங்களும் நானும் அப்படியா..? சாம்பார் இன்னும் கொஞ்சம் விடட்டுமா?"

"வேண்டாம். போறும். நீ என்னதான் சொல்லு. பொண்களுக்கு அடக்க ஒடுக்கம் வேணும். புருஷாளுக்குச் சரியா சேர்ல உக்காந்துண்டு பேசறதும் சிரிக்கிறதும் பாத்த மாவே இல்லே. அசட்டுப்பிசட்டுனு இருக்கு."

"ஆமாமா. இது மாதிரி பொண்களை யெல்லாம் நம்பவே கூடாது. அமைதியாப் போயிண்டிருக்கிற குடும்பங்களைக் கலைச்சுடுவா."

விசாலம் திடுக்கிட்டுத் தலை நிமிர்ந்தாள். "ராமசாமி அப்படிப்பட்டவன் இல்லே!" என்றாள்.

7

ராஜாராமனைக் கண்டதும் அந்த இளைஞன் எழுந்து நின்று கைகூப்பி அவரை வணங்கினான். பதிலுக்கு அவனை வணங்கிய ராஜாராமன், "உக்காருங்க, உக்காருங்க," என்றவாறு தாமும் அவனுக்கு எதிரே ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார்.

அவனுடைய தயக்கத்தைப் பார்த்து விட்டு, "ஏதாவது கேஸ் விஷயமா வந்திங்களா?" என்ற கேள்வியைச் சம்பிரதாயமாக அவ்விளைஞனைப் பார்த்து அவர் கேட்ட போதிலும், வழக்கு எதன் பொருட்டும் அவன் தம்மை நாடி வரவில்லை என்பது உள்ளுணர்வாக அவருக்குத் தோன்றி விட்டிருந்தது. பார்த்த மாத்திரத்தில் அவன் ஒரு புரட்சிக்காரனாகத்தான் இருக்க வேண்டும் என்று அவர் கணித்து விட்டார். அவரது கணிப்பு முற்றும் சரியே என்பது சீக்கிரமே நிருபணமாயிற்று.

"என் பெயர் நரேந்திரநாத் பானர்ஜி. லண்டனில் என் மூத்த சகோதரன் இந்திரநாத் பானர்ஜி சட்டம் படித்துக் கொண்டிருக்கிறான். லண்டனில் உள்ள இந்தியா ஹவுசில் மற்ற இந்திய மாணவர்களுடன் தங்கி இருக்கிறான். தங்கள் மகன் அருணாசலம் அவனுடைய நெருக்கமான நண்பர்களில் ஒருவன்..." என்று ஆங்கிலத்தில் சின்னதாய் ஒரு பீடிகை போன்ற பாணியில் சொல்லி விட்டு, அவன் தன் கைக்குட்டையைச் சட்டைப் பையிலிருந்து எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டான். பிறகு, "தமிழ் புரியும், ஆனால் பேச வராது!" என்றான்.

ராஜாராமன் கவலையுடன் அவனைப் பார்த்தார். "நீங்கள் தடுமாறுவதைப் பார்த்தால் மகிழ்ச்சியான செய்தியுடன் வரவில்லை என்று தோன்றுகிறது" என்றார்.

"நான் சொல்லப் போகும் விஷயம் சற்று மோசமானதுதான். ஆனால் திடமான மனமும் தீவிரமான தேசப்பற்றும் உள்ள படித்த அறிவாளியான தங்களுக்கு அது அவ்வளவு கவலையை அளிக்காதென்றே நான் நம்புகிறேன்" என்று மறுபடியும் ஒரு சிறு முன்னுரையையே படித்தான் நரேந்திரநாத் பானர்ஜி.

"எதுவாக இருந்தாலும் தயங்காமல் சீக்கிரம் சொல்லுங்கள்."

"பயங்கரவாத நடவடிக்கைகளுக்காக உங்கள் அன்பு மகனும் என் அண்ணனின் அருமை நண்பனும் ஆன அருணாசலம் கைது செய்யப்பட இருந்தான். ஆனால்,



"என் பையன் எள்ளுன்னா, எண்ணெயோட, வந்து நிப்பான்!"

"ஏன், 'காது' கேட்காதா?"

-ஆர்.வசந்தகுமார்.

அந்தச் செய்தி லண்டன் உளவுத் துறையில் பணிபுரியும் ஓர் ஆங்கிலேய நண்பனின் மூலம் முன்னதாய்த் தெரிய வந்து, அருணாசலம் ஓர் ஆங்கிலோ இந்தியக் கிறிஸ்தவனைப் போல் காட்டிக் கொண்டு, பிரான்ஸ் நாட்டுக்குப் போய் விட்டான். கப்பலில் ஏறியது வரையில் எங்களுக்குத் தெரியும். மார்சேல்ஸ் துறைமுகத்தில் இறங்கப் போவதாகச் சொன்னதும் தெரியும். அநேகமாய்ப் போய்ச் சேர்ந்திருப்பான். அல்லது வழியில் ஏதேனும் தடங்கல் ஏற்பட்டிருப்பின் சற்றுத் தாமதம் ஆகக்கூடும். அவன் பிரான்ஸ் நாட்டைச் சென்றடைந்தானா அல்லது பாதிப் பயணத்திற்குள் சுட்டு வெளிப்பட்டு மாட்டிக் கொண்டிருப்பானா என்பது தோன்றும் எங்களுக்குத் தற்சமயத்துக்குத் தெரிய வாய்ப்பில்லை. அருணாசலத்திடமிருந்து இனிக் கொஞ்ச காலத்துக்குத் தங்களுக்குக் கடிதம் வரக்கூடிய சாத்தியக் கூறுகள் இல்லை என்ற நிலையில் நடந்ததையெல்லாம் தங்களுக்குத் தெரிவிக்குமாறு அருணாசலம் எங்களுக்குச் செய்தியனுப்பினான்."

"உங்களுக்கு மட்டும் எப்படி செய்தி கிடைத்தது?"

"கல்கத்தாவில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் ராஜாபஜார் கழகத்தில் நான் உறுப்பினன். கப்பல் மாலுமிகளைக் கைக்குள் போட்டுக் கொண்டு இந்தியா ஹவுசில் வாழும் நம் நாட்டுத் தேசபக்த வாலிபர்கள் லண்டனிலிருந்து கைத் துப்பாக்கிகள், வெடிகுண்டுகள் போன்றவற்றைத் திருட்டுத்தனமாக நம் நாட்டுப் புரட்சி இயக்கத்தினர் அடைய உதவி வருகின்றனர். அவர்கள் மூலம் நம் நாட்டின் பல பகுதிகளிலும் தீவிரவாத நடவடிக்கைகள் வலுத்து வருகின்றன. அயல் நாட்டினருடன் நாங்கள் இடைவிடாத தொடர்பு கொண்டுள்ளோம். என் அண்ணன் இந்திரநாத் பானர்ஜி லண்டனில் இருக்கிறார் என்பதை ஏற்கெனவே சொன்னேன்..."

ராஜாராமனின் முகத்தில் தம் மகன் என்ன ஆனானோ என்ற கவலையை மீறி வியப்பும் மகிழ்ச்சியும் தோன்றின.

"உங்களையொத்த இளைஞர்கள் உண்மையில் பாராட்டுக்குரியவர்கள், மிஸ்டர் நரேந்திரநாத்! நான் உங்களையெல்லாம் எண்ணி மிக மிகப் பெருமைப்படுகிறேன். நீங்கள் மிகப் பெரிய தியாகிகள்."

நரேந்திரநாத் பானர்ஜியின் முகத்தில் சற்றே சிவப்புத் தோன்றியது. "அப்படியெல்லாம் ஒன்றுமில்லை, அய்யா. பெரிய பெரிய வார்த்தையெல்லாம் சொல்லாதீர்கள்.



**"அண்ணே! திடீர்னு கட்சி மாறிட்டீங்களாமே...எனக்குக் கூடச் சொல்லவே இல்லியே!**

**"நீங்க ஒண்ணு. எனக்கே காலையில பேப்பர் பார்த்துத்தான் தெரியும்!"**

**– கடுவை கோபால்சாமி.**

---

பெற்ற மக்களைத் தியாகத்துக்குத் தயார் படுத்திப் பெருமை கொள்ளும் உங்களைப் போன்ற தகப்பன்மார்களைக் காட்டிலும் நாங்கள் உயர்ந்தவர்கள் அல்ல, ஐயா, மேலும் ஒரு வேண்டுகோள்..."

"என்ன?"

"நான் உங்கள் மகனைப் போன்றவன். என்னை நீங்கள் 'மிஸ்டர்' போட்டு அழைக்க வேண்டாம்."

"சரி" என்று ராஜாராமன் ஒப்புக் கொண்டு புன்னகை செய்தார்.

"அருணாசலத்தைப் பற்றி வேறு தகவல்கள் கிடைத்ததும் நான் தங்களோடு தொடர்பு கொள்ளுவேன், அய்யா. கவலைப் படாதிருங்கள். அப்போது நான் வரட்டுமா?" என்றவாறு எழப் பார்த்த நரேந்திரநாத் பானர்ஜியைத் தோள் பற்றிக் கட்டாயமாக உட்கார வைத்த ராஜாராமன், "அதற்குள் என்ன அவசரம்? உன்னோடு நான் நிறைய பேச விரும்புகிறேன். உன்னைப் பற்றி, வடக்கே இயங்கி வரும் பயங்கரவாத இயக்கங்களைப் பற்றி எல்லாம் நான் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன், உட்கார். என் வீட்டில் எதுவும் சாப்பிடாமல் நீ அவ்வளவு எளிதாய்த் தப்பித்துக் கொண்டு போய் விட முடியாது" என்றார். தொடர்ந்து, "இன்னொரு விஷயம். என் மனைவிக்கு ஆங்கிலம் பேச வராது. ஆனால் எளிமையான ஆங்கிலத்தை அவளால் புரிந்து கொள்ள முடியும். தன் மகனுக்கு நேர்ந்துள்ள இக்கட்டு பற்றி அவள் அறியக் கூடாது. எனவே அவள் எதிரே நீ எதுவும் பேசாதே. அருணாசலம் சௌக்கியமாக இருப்பதாய்ச் சொல்லி அனுப்பியுள்ளதாகத்தான் நான் அவளிடம் சொல்லப் போகிறேன். என்ன?" என்று எச்சரித்தார்.

(தொடரும்)



• சில்ரண்ட்ஸ் ஆர்ட்ஸ் குரூப்...

# உழைக்கும் நாட்டில் ஓய்வுக்கும் நேரமுண்டு!

குவைத்துக்குச் செல்வதே உழைத்து உழைத்துப் பொருள் சேர்க்கத்தான் என்றாலும் உழைப்பின் களைப்புத் தெரியாமலிருக்க வேறு ஏதாவது செய்ய வேண்டாமா? இந்தக் கேள்வி பலரின் மனத்திலும் எழுந்தபோது ஏற்பட்டதுதான் பாரதி கலை மன்றம். ரெங்கசாமி, செந்தமிழ் அரசு, ராமசுப்ரமணியன், ரகுராமன், ரஃபி அகமது, சுப்புராமன், லதா சீனிவாசன், சத்யா, சுதர்ஸன்.... என்று ஏராளமானோரின் கூட்டு முயற்சி காரணமாக, சதாமின் படையெடுப்பையும் முறியடித்துவிட்டுச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது!

கலை, இலக்கியம், நாடகம், நாட்டியம், இசை, ஓவியம் மட்டுமல்ல; கம்ப்யூட்டர் வகுப்பிலிருந்து யோகாசனம் வரை எதையும் விட்டுவைக்காமல் நடத்துகிறார்கள். குழந்தைகளுக்குத் தமிழ் வகுப்புகள் நடத்துகிறார்கள். சென்னை தொலைக்காட்சி நிலையத்தில் செய்தி வாசித்துக் கொண்டிருந்த செந்தமிழ் அரசு இங்கே அவ்வப்போது மெல்லிசை விருந்தளித்து மகிழ்விக்கிறார். இந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம் இந்தியத் தூதரகம் குறைந்த வாடகையில் அரங்கம் கொடுத்து ஊக்குவிப்பது இன்னொரு உற்சாகம்.

பெரியவர்கள் இப்படியென்றால் குழந்தைகளும் சும்மா இருக்கவில்லை. 'சில்ரண்ட்ஸ் ஆர்ட்ஸ் குரூப்' என்கிற பெயரில் நாடகம், நாட்டியம் என்று வெளுத்து வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். இங்கே பதினோராம் வகுப்புப் படிக்கும் அரவிந்த், டி.என். கிருஷ்ணனின் சிஷ்யன். நம் நாட்டின் பாலநேரு விருது பெற்றிருக்கிறான் என்பது கூடுதல் சிறப்பு. இவையும் போதாமல் போரடிக்க ஆரம்பித்தால் குழந்தைகள் என்ன செய்வார்கள்?

இருக்கவே இருக்கிறது 'என்டர்டெய்ன்மெண்ட் சிட்டி'. இதற்குள் தோட்டம், படகுச் சவாரி, எதிர்கால உலகம், விண்டேஜ் கார்கள், மூன் ஆர்பிடர், Atom Smasher என்று குழந்தைகள் பொழுது போக்க ஏராள ஐயிட்டங்கள். குழந்தைகளைச் சாக்கிட்டுப் பெரியவர்களுக்கும் நல்ல பொழுது போக்குக் கிடைக்கிறது.

இது தவிர, விடுமுறை நாட்களில் பிக்னிக் மாதிரி போய் பொழுது போக்குவதற்கும் ஓர் இடம் இருக்கிறது. அதுதான் கிரீன் ஐலண்ட். குவைத்தியர்கள் இங்கு ஏராளமான பங்களாக்களைக்



• என்டர்டெய்ன்மெண்ட்....

கட்டி, லாரிகளில் தண்ணீரை வரவழைத்துத் தோட்டங்களைப் பராமரிக்கிறார்கள். வார விடுமுறைகளை இங்கு வந்து ஜாலியாய் அனுபவிக்கின்றனர்.

கிரீன் ஐலண்டில் பீச் குளியல், போட்டிங் என்று நிறைய பொழுது போக்குகள் உள்ளன. தவிர, கிரான் ரிசார்ட்ஸ் என்னுமிடத்தில் தங்குவதற்கான காட்டேஜ்களும் உண்டு. இதற்கு நாள் வாடகை நான்காயிரம் ரூபாய்! இருப்பினும் குடும்பத்தோடு செல்வதற்கு அருமையானதோர் இடம். போகும் போது கணவன் - மனைவி என்பதற்கான ஆதாரம் காட்ட வேண்டும். இல்லையெனில் தங்குவதற்கு அனுமதியளிக்க மாட்டார்கள்!



• சிட்டி

அப்புறம் குவைத் நகரிலுள்ள முருகாப் என்னும் இடம். ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் இந்தியர்கள் ஒன்றாகக் கூடும் இடம் இது. தமிழர்கள் சென்னை, கோவை, திருச்சி, சேலம்... என்று மாவட்ட வாரியாகச் சந்தித்துக் கொண்டு, தாயகம் சென்று வந்தவர்களிடம் அவரவர் மாவட்ட நிலைமைகள் பற்றி விசாரித்துத் தெரிந்து கொள்கிறார்கள். இனி போகப் போகிறவர்களிடம் பொருள்களையோ கடிதங்களையோ கொடுத்தனுப்புகிறார்கள். பொழுது போக்காக மட்டுமல்லாமல் சொந்த ஊர் நிலவரங்களைத் தெரிந்து கொள்கிற பயனுள்ள சந்திப்பாகவும் இருக்கிறது குவைத் வாழ் இந்தியர்களுக்கு!

**உஷா கௌசிக், சந்திரன்,**
**அன்பழகன், அரசு, திருநெல்வேலி**
**சங்கர், முத்து.**

படங்கள் : **வினோத்**

• பாரதி கலை மன்றத்தினர்





• கிரீன் ஐலண்ட்



சின்னஞ் சிறிய விதை. அது முளைவிட்டு வலுவாக வேரூன்றி மாபெரும் ஆலமரமாக வளர்ந்து விடுகிறது. பரந்து விரிந்த கிளைகள். அவற்றிலிருந்து கீழிறங்கி பூமியில் பதியும் விழுதுகள். ஆலமரம் நீண்ட காலத்துக்கு நிலைத்து நின்று அதனடியில் வருகிறவர்களுக்கெல்லாம் நிழல் தருகிறது.

சக்தி பைனான்ஸும் அப்படித்தான். உங்களுடைய சேமிப்புக்கு அதிக பாதுகாப்பு அளிக்கிறது. உங்கள் நலனில் அக்கறை கொண்டு உங்கள் டெபாசிட்டுகளுக்கு நீங்கள் அதிக வருமானம் பெற வகை செய்கிறது. ஸ்திரத்தன்மையைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.

சக்தி நிறுவனங்களின் எண்ணிக்கை 20. மொத்த ஆண்டு வர்த்தகம் ரூ. 700 கோடி. 1.5 லட்சம் டெபாசிட்தாரர்கள் மிகுந்த நம்பிக்கையோடு வைத்திருக்கும் டெபாசிட் தொகை ரூ. 150 கோடி. நாடு முழுவதும் 37 கிளைகள். 25 சேமிப்புமையங்கள். பரவலாகப் பாதுகாப்புப் பெட்டகங்கள்.

சக்தி பைனான்ஸ் ஒவ்வொரு வாடிக்கையாளரின் தேவையையும் பூர்த்தி செய்வதில் தனிப்பட்ட கவனம் செலுத்துகிறது. அதற்காகவே அவர்களின் தேவைகளைப் புரிந்து கொண்டு பல புதுமையான திட்டங்களை முதன் முதலாக அறிமுகப் படுத்திய



சிறப்பையும் பெற்றுள்ளது. அது மட்டுமல்ல. இத்தகைய திட்டங்களைப் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து அறிமுகப்படுத்தி விரைவாகச் செயல் படுத்துவதிலும் முன்னோடியாகத் திகழ்கிறது.

உங்கள் சேமிப்புகளை சக்தி பைனான்ஸில் டெபாசிட் செய்யுங்கள். நிம்மதி பெறுங்கள்.



**சக்தி**
**பைனான்ஸ் லிமிடெட்**

பதிவு அலுவலகம் :
475 டாக்டர் நஞ்சப்பா சாலை கோயம்புத்தூர். 641018.
தொலைபேசி எண் :
231471/231472/231473/234174

குவைத்
கதை
2

# தாயகம் தொலைத்து

ப்ருதிவிராஜ்

"நாம இரண்டு பேருமே நாடில்லாத ஆளுங்க. ஊர் ஊராகப் போறவங்க. அதான் கம்பெனி சேர்ந்திருக்கிறோம்" என்று சேந்தன் சிரித்துக் கொண்டுதான் சொன்னான். ஆனால் அந்த வார்த்தைகள் லாமாவைக் கண்கலங்க வைத்து விட்டன.

"சாரி லாமா. சாதாரணமாகச் சொன்னேன்" என்றான் பஃபே பார்ட்டியில் தனியாக நின்று கொண்டிருந்த லாமாவிடம்.

"நாம இரண்டு பேரும் சரியான கம்பெனி!" - என்று லாமா சொல்ல, சேந்தன் சொன்ன பதில் லாமாவைப் பாதித்து விட்டது.

சேந்தன் இலங்கைத் தமிழன். லாமா பாலஸ்தீனப் பெண். இருவரும் குவைத்தில் ஒரே கம்பெனியில் வேலை பார்ப்பவர்கள்.

ஓர் இந்தியனைப் போலவோ, ஒரு எகிப்தியனைப் போலவோ, சொந்த ஊரில் பிளாட் வாங்கும் கற்பனையுடன், கார் வாங்கும் கற்பனையுடன் குவைத் நாட்டிற்கு வரவில்லை. அரசப் பயங்கரவாதத்தால் துரத்தப் பட்ட இனம், வாழ வழி தேடி வந்திருக்கிறது.

எண்பத்தி மூன்றாம் ஆண்டு இனக் கலவரத்திற்குப் பிறகு ஆயுதம் தூக்கிய இளைஞர்களில் சேந்தனும் ஒருவன். இயக்கத் தொடர்பு வேலைகளைச் செய்வதில் திறம்படப் பணியாற்றினான். எண்பத்தியாறில் இயக்கத்தின் துப்பாக்கிகள் எதிரிகளைப் பதம் பார்க்காமல், சொந்தச் சகோதரர்களைக் கொன்றது. சிறிசபாரத்தினம் படுகொலை செய்யப்பட்டார். சேந்தனுக்கு இயக்கம் வெறுத்துப் போனது. கொலைவெறி அருவருப்பானது. துப்பாக்கியைத் தூக்கி எறிந்தான்.

துப்பாக்கியைத் தூக்கி எறிவது சுலபம். இயக்கத் தொடர்புகளை விட்டொழிப்பது சுலபமல்ல. துரோகப் பட்டம் சூட்டப்படும். இயக்க விதிமுறைகளின்படி விதிக்கப்படும் தண்டனைகள் தவிர்க்கவின்றி நிறைவேற்றப் படும். சேந்தனுக்குத் தான் மாட்டிக் கொண்டிருக்கும் வலை புரிந்து போனது. தப்பிக்க ஒரே வழி. யாரோ ஒரு ஏஜெண்டைப் பார்த்தான். குவைத்தில் வேலை வாங்கினான். ஒரு டிரேடிங் கம்பெனியில் அக்கௌண்டண்டாகச் சேர்ந்தான்.

ஆயுதமும், அரசியலும் வாழ்க்கையாக இருந்தவனுக்கு அலுவலக வாழ்க்கை என்ற வட்டத்திற்குள் சிக்குவது சிரமமாக இருந்தது. பிறகு காலையில் குப்பூஸ், சாகர் மெஸ்ஸில் சாப்பாடு. பிர்தௌஸ் தியேட்டரில் ஹிந்தி சினிமா.. என்று வாழ்க்கை சுழல ஆரம்பித்தது. இந்தச் சுழல் வாழ்க்கை போரடிப்பதற்கு முன்பு, அதில் ஓர் ஈர்ப்பு ஏற்படுத்தியவள் லாமா.

கம்பெனியில் புது செக்ரட்டரியாகச் சேர்ந்தாள் லாமா. அப்படி ஓர் அழகு! தான் தனது நாட்டில் அழகு என்று கருதிய பெண்களை நினைத்துச் சிரித்தான்.

இருவரும் ஒரே இடத்திலிருந்து வருவதால், சேந்தனுக்குக் கம்பெனி கொடுத்த காரில், லாமாவையும் அழைத்து வர கம்பெனி பணித்தது. அவளை அழைத்து வருவது வாடிக்கையாய்ப் போனது.

"எங்கப்பா சாப்ரா படுகொலையில் பலியாயிட்டார்."

(இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட அப்பாவி பாலஸ்தீனர்களை, அகதிகள் முகாமில் புகுந்து இஸ்ரேல் இராணுவம் 'சாப்ரா' என்ற இடத்தில் 1982-ல் கொன்று குவித்தது.)

விவரம் சொல்ல ஆரம்பித்த லாமா, குரல் உடைந்து அழ ஆரம்பித்தாள். காரை ஓரத்தில் நிறுத்தினான்.

"சரி. அழாதீங்க."

"நாடில்லாதவங்க சோகம் உங்களுக்குப் புரியாது" என்றாள் சுருக்கென்று. சேந்தன் ஒன்றும் பேசவில்லை.

ஒருநாள் அவளிடம் சொன்னான். அவளுக்கு இலங்கைத் தமிழர் பிரச்னை தெரிந்



# பர்கள்

திருக்கவில்லை. இனக் கலவரம் நடந்ததை, பெண்கள் கற்பழிக்கப்பட்டதை, குழந்தைகள் கொல்லப்பட்டதை, உயிருக்கு கூட உத்திர வாதம் அளிக்காத இனவெறி அரசாங்கத்தை, சகோதரர்களைக் கொன்று குவிக்கும் போரா ளிகளை... எல்லாவற்றையும் சொன்னான். லாமா அவனையே பார்த்துக் கொண்டிருந் தாள்.

"என்ன அப்படிப் பார்க்கறே?"

"வி ஆர் இன் தி ஸேம் போட்" என் றாள்.

இந்த சம்பவத்திற்குப் பிறகு தானும், லாமாவும் நெருங்குவதைச் சேந்தன் உணர்ந் தான். இவனுக்கும் சேர்த்து லஞ்ச் எடுத்து வந்தாள். ஏதாவது பேசிக் கொண்டேயிருந் தார்கள். பேச வேண்டும் என்பதுதான் நோக் கம். என்ன பேசினால் என்ன? லாமா தன் ளிடம் ஒரு சலனத்தை உருவாக்கியிருப்பதை உணர்ந்து கொண்டான். அதை அவளிடம் சொல்லாமல் இருந்தால் அந்த காத லுக்கே அர்த்தமில்லை.

எப்படிச் சொல்வது என்று யோசி த்தான். சினிமாவில் சேர்ந்து பெரிய பாடகனாக வேண்டும் என்று நினைத்த சிறு வயது சேந்தனுக்கும், ஆயுதம் தூக்கி தனி ஈழம் அடையப் புறப்பட்ட போராளி சேந்தனுக்கும், பாலஸ்தீனப் பெண் ணிற்குக் காதல் கடிதம் எழுத யோசிக்கும் சேந்தனுக்கும் உள்ள முரண்பாடு, சேந்த னுக்கே சிரிப்பாக வந்தது. லாமாவிற்கு கிரீட் டிங் கார்டு வாங்கினான்.

"என்னுடைய மௌனம் உனக்குப் புரிய வில்லை என்றால், என்னுடைய வார்த்தை களும் உனக்குப் புரியாது!" என்ற வாசகங்கள் அடங்கிய கார்டு. "உன்னுடைய பதிலை எதிர்பார்த்து" என்று கையெழுத்துப் போட் டுக் கொடுத்தான். ஆபீஸில் யாருமில்லாத போது, அவள் கையில் கொடுத்தான். லாமா விற்குப் புரிந்து போனது. கண்களில் மகிழ்ச்சி தெரிந்தது.

"ஒருநாள் முந்திட்டீங்க."

"என்ன?"

"நாளைக்கு நான் சொல்ல வேண்டும் என நினைத்தேன். எர்லியர் ஆல்வேஸ் பெட்டர். ஐ லவ் யூ" என்று சொன்னவாறே அவளை இழுத்து ஒரு முத்தமிட்டாள். முத்தத்தின் அதிர்ச்சியில் சேந்தன் நின்ற போது, அதைவிட அதிர்ச்சியாய், எகிப்திய மானேஜர் கதவைத் திறந்து உள்ளே வந்தார். இருவரையும் முறைத்தார்.

"இரண்டு பேரும் என் ரூமிற்கு வாங்க," என்று சொல்லி விட்டுப் போக, சேந்தனுக்கும், லாமாவிற்கும் உதறல் எடுத்தது. ரூமிற்குள் மெதுவாக நுழைந்தனர்.

"ஒரு மானேஜராக நான் உங்க மேல ஆக்ஷன் எடுக்க முடியும். நான் விரும்பவில்லை. நீங்கள் இரண்டு பேரும் எவ்வளவு, சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கங்க.."

காதல் கன்பர்ம் ஆன மறு நிமிஷமே கல்யாணப் பேச்சு! வேடிக்கைதான்.

"ஓ.கே. சார்!" என்றான் சேந்தன் மகிழ்ச்சியுடன்.

மானேஜர் நிறைய உதவிகள் செய்தார். ஒரு லாயரிடம் கூட்டிப் போனார். இரண்டு வெவ்வேறு தேசத்தவர்கள் திருமணம் செய்யும் விதிமுறைகளைச் சொன்னார். தூதரகத்திற்குக் கூட்டிப் போனார். பேப்பரில் "இவர்கள் திருமணம் செய்யப் போகிறார்கள். ஆட்சேபணை இருப்பவர்கள் தெரிவிக்கவும்" என்று விளம்பரம் கொடுத்தார். ஆகஸ்ட் 11-ம் தேதி திருமணம், மாலை "கார்ல்டன் டவர்ஸ்" பார்ட்டி என்று முடிவானது.

மறுநாள் காலையில் டெலிபோன் மணி அடித்தது.

"ஹலோ" என்றான்.

"ஹாய்! நான் லாமா பேசறேன்!"

"ஆபீஸிற்கு லேட்டாயிட்டுதா?"

"ஆபீஸா? எந்த உலகத்தில் இருக்கே? குவைத்தை ஈராக் ஆர்மி பிடித்து விட்டது. இது இனி குவைத் நாடு அல்ல. ஈராக்கின் ஒரு மாநிலம்."

அதிர்ந்து போனான் சேந்தன்.

ஒரே இனம், ஒரே மதம், ஒரே மொழி என வாழ்ந்த மக்களை வதைக்கும் ஆதிக்க வெறியில் ஆக்கிரமிப்பு நடந்தது. அரபு உலகைப் பல ஆண்டுகளுக்கு ஆட்டிப் படைக்கும் சம்பவம் நிகழ்ந்து விட்டது.

பத்து நாட்களில் அனைத்தும் தலைகீழாக மாறி விட்டது. கல்யாணம் என்பது கனவாய்ப் போனது. யுத்தம் வரக் கூடிய பூமி என்று தெரிந்தவுடன் பிழைப்புத் தேடி வந்த கூட்டம், பொருளைத் தொலைத்து விட்டு, உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஓடியது.

சேந்தன் காரில் லாமாவை ஏற்றிக் கொண்டு பாக்தாத் போனான். பிறகு பிளேனில் அம்மான் சென்றான். இருவருக்கும் சட்டப்படி திருமணம் முடிந்திருக்கவில்லை. அவளை

ஸ்ரீலங்காவோ, இந்தியாவோ அழைத்துப் போக முடியாது. அவனுடன் தான் லெப னான் போவதோ நடவாத காரியம்.

"விதியின் காரணமாக நாம் பிரிந்தாலும், என்னுடைய இதயத்தின் ஒவ்வொரு துளியி லும் நீதான் இருக்கிறாய். பிரிக்கும் விதியே நம்மை இணைக்கும்" என்று சொன்னாள். கலங்கிய சேந்தனைக் கண்களில் முத்தமிட்டு வழியனுப்பினாள்.

ஆறு மாதத்தில் ஆக்கிரமிப்பாளர்கள் அட்டகாசம் ஒடுங்கிப் போனது. நாற்பது மணி நேர தரைப் போரில் குவைத் மீண்டது.

தமிழகம் போக பயந்து கொண்டு, பம்பா யில் பயந்து, பயந்து வாழ்ந்து கொண்டிருந்த சேந்தனுக்கு நிம்மதி. ராஜீவ்காந்தி படு கொலையால் ஈழ இயக்கம் இந்தியத் தமிழர்க ளுக்குக் கசந்து போயிருந்தது. போராளிகள் துரோகிகளாயினர். அகதிகள் சுமைகளா யினர். அரசியல் தலைமையின் தவறான முடிவுகளால் ஓர் இனமே பாதிக்கப்படுகிறது.

குவைத்திலிருந்து சேந்தனுக்கு அழைப்பு வந்தது. அதே கம்பெனி. அதே மானேஜர். அதே மடம். யுத்தம் நடந்த பூமி போலவே யில்லை. ஆனால் லாமாவைக் காணோம். எங்கேயிருப்பாள்? மானேஜர் கூப்பிட்டார்.

"உங்களை மீண்டும் பார்ப்பதில் ரொம்ப சந்தோஷம். நம்ம மடம் அப்படியே ஒன்று சேர்ந்து விட்டோம் லாமா தவிர."

"சார்..."

"சாரி சேந்தன். நான் எவ்வளவோ முயற்சி பண்ணினேன். பாலஸ்தீனியர்களுக்கு விசாவே கொடுக்க மாட்டேன்ங்கறாங்க. உங்க ளுக்குத் தெரியும். பி.எல்.ஓ. ஈராக்கை ஆதரித்த தால், இந்த நிலைமை. என்ன செய்ய முடி யும்?"

மீண்டும் அரசியல் தலைவர்களின் தவறு களுக்கு ஓர் இனமே துரோகப் பட்டம் சுமக்க வேண்டியுள்ளது.

"லாமா உள்ள வரவே முடியாதா?"

"என்ன செய்வது. யுத்தத்திற்கு முன்னால் பாலஸ்தீனியர்களுக்கு ராஜ மரியாதை. ஹவாலி ஏரியா குட்டி பாலஸ்தீன். இன்று அவர்கள் துரோகப் பட்டம் சுமப்பவர்கள். நான் லாமாவிற்கு விசா வாங்க கடுமையாய் முயற்சி பண்றேன். நம்பிக்கையோடு இருங்க. இன்சா அல்லாஹ்!" என்றார்.

"நம்பிக்கைதானே வாழ்க்கை" என்றபடி சேந்தன் வெளியே வந்தான். சினிமா பாட களாகி விடுவோம் என்ற நம்பிக்கை போலில் லாமல், தனி ஈழம் அடைவோம் என்ற நம் பிக்கை போலில்லாமல் இந்த நம்பிக்கையா வது நிறைவேறும் என்ற நம்பிக்கையுடன் காத்திருந்தான் சேந்தன்.

**அருள்வாக்கு**



நமக்கு துக்கஹேதுவாக இருப்பது சரீரமும் அதன் மூலம் செயல்படுகின்ற மனஸுமும்தான். துக்கம் போய் ஸதா ஆனந்தமாக இருப்பதைத்தான் எல்லா மதத்திலும் மோக்ஷம் என்று சொல்லப் படுகிறது. அதற்காக வேறு ஏதோ பரலோகம், மோக்ஷலோகம் என்று ஒன்றுக்குப் போக வேண்டும் என்று தான், அத்வைதத்தைத் தவிர மற்ற ஸம்பிரதாயங்களெல்லாம் சொல்கின் றன. அந்த லோகங்களில் கிடைப்பதை விட நிறைவான ஆனந்தம், நிஜமான மோக்ஷம், இந்த லோகத்தில் இருக்கும் போதே, சரீர அபிமானத்தை அடியோடு தள்ளி விட்டு ஆத்மாவில் வேறன்றி நிற்பதால் கிடைக்கிறது என்று, சங்கர பகவத்பாதாள் ஸ்தாபித்திருக்கிறார்.

நதேதத் அசரீரத்வம் மோக்ஷாக்யம் என்று ஸூத்ர பாஷ்யத்தில் (1.1.4) சொல்கிறார். 'அசரீரி' என்றால், நாம் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறோ மென்றால், ஆள் தெரியாமல் ஒரு குரல் மட்டும் கேட்பது என்று. அசரீரி என்றால், சரீரம் இல்லாமலிருப்பது என்பதே அர்த்தம். "சரீரம் நான்" என்ற பிரக்ஞை போகிறதுதான் அசரீரத்வம். அதுதான் மோக்ஷம் என்று ஆசார்யாள் லக்ஷணம் கொடுக்கிறார். சரீரம் இல்லாமல் அசரீரி யாகப் பண் ணிக் கொள்வது என்றால், தற்கொலை செய்து கொள்வது என்று அர்த்த மில்லை. ஆசைகளை குறைத்துக் கொண்டே வந்து, அடியோடு தேய்த்து விட்டால் சரீராபிமானம் முற்றிலும் போய்விடும். உள்ளேயிருக்கிற ஆத்மா மட்டுமே பிரகாசிக்கும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச் சார்ய சுவாமிகள்.



• பாலைவனச் சோலை

# கம்ப்யூட்டர் காரட்; சொட்டுநீர் முட்டை கோஸ்!



• காரட், பேரீச்சைத் தோட்டம்...

குவைத் ஒரு பாலைவனப் பிரதேசம். சீதோஷ்ணநிலை என்று பார்த்தால், மிகக் கடுமையான வெப்பம் அல்லது மிகக் கடுமையான குளிர். ஆறுகள் என்கிற பேச்சே இல்லை!

இதனால் பண்டைக்கால குவைத்தியர்கள் அபூர்வமாகப் பெய்யும் மழை நீரைப் பிடித்துச் சேமித்து வைத்துக் கொண்டும் அதைவிட அபூர்வமாகக் கிடைக்கும் ஊற்று நீரையும் நம்பித்தான் குடிநீர்ப் பிரச்னையைச் சமாளித்துக் கொண்டிருந்தனர். பிறகு ஈராக்கிலுள்ள ஷட்-அல்-அராப் என்னும் ஆற்றிலிருந்து தண்ணீரைக் படகுகளில் கொண்டு வந்து பயன்படுத்திக் கொண்டிருந்தனர்.

விஞ்ஞானம் வளர வளரத்தான் 1953 - ல் கடல் நீரைக் குடிநீராக்கும் முதல் ஆலை நிறுவப்பட்டது. இப்போது ஐந்து ஆலைகள் உள்ளன. குடி நீரைக்கூட ஆலைகளின் மூலம்தான் உற்பத்தி செய்ய வேண்டியிருக்கிறது என்றாலும் கூட குவைத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் நாளொன்றுக்கு அறுபது காலன் குடி நீர் தாராளமாகக் கிடைக்கிறது!

இங்கு விவசாயத்திற்கும் குறைவில்லை. ''Green House'' என்று சொல்லப்படும் பல செயற்கை வீடுகளை அமைத்து, அவற்றின் சீதோஷ்ண நிலையைக் கம்ப்யூட்டர்கள் மூலம் கட்டுப்படுத்தி, சொட்டு நீர்ப் பாசனம் மூலம் காரட், முட்டைக் கோஸ், காலிபிளவர், குடமிளகாய், தக்காளி, கத்தரி, வெள்ளரி என்று பயிரிட்டு ஜமாய்க்கிறார்கள். தவிர, ஆங்காங்கே தென்படும் பாலைவனச் சோலைகளிலும் தண்ணீரைச் சிக்கனமாகப் பயன் படுத்திப்பயிரிடுகிறார்கள். ஆக, தண்ணீரே ஓர் அபூர்வமான விஷயமாக உள்ள குட்டி நாடான குவைத்தில் கூட ஆண்டொன்றுக்கு 80,000 டன் காய்கறிகள் விளைகின்றன!

— சுப்புராமன்,
ஈஸ்வர் ராஜ்.




அகம்பனன் மாண்டதையறிந்து ராவணன் முகம் சற்று வாடிற்று. கோபாவேசமாக யோசனை பண்ணினான். மறுபடியும் நகரத்தின் காப்பு நிலையைச் சுற்றிப் பார்த்து விட்டுத் திருப்தியடைந்து திரும்பினான். சேனாதிபதி பிரஹஸ்தனோடு கலந்து பேசினான்.

"இந்த வானர முற்றுகையை ஒழித்துக் கட்ட வேண்டும். சேனையுடன் வெளிச் சென்று பலமான யுத்தம் செய்து இவர்களுடைய தலைவர்களை வதம் செய்தால்தான் இது முடியும். நான், கும்பகர்ணன், நீ, இந்திரஜித்து, நிகும்பன் இந்த ஐவர்களுள் ஒருவர் இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு சேனையுடன் கோட்டையை விட்டுப் புறம் சென்று யுத்தம் செய்ய வேண்டும். இந்த வானரர்களைக் கண்டு நாம் இவ்வளவு பயப்படுவதா? நம்முடைய ராக்ஷசர்களின் கர்ஜனையைக் கேட்டாலே இந்தப் பிராணிகள் சிதறியோடும். யுத்த முறையின் அறிவும் பயிற்சியுமில்லாத இவர்களை ஓட்டுவது ஒரு கஷ்டமல்ல."

பிரஹஸ்தன் இதைக் கேட்டு வினயமாகப் பேசலானான்.

"நாம் முன்பு எதிர்பார்த்தபடியே எல்லாம் நேர்ந்திருக்கின்றது. சீதையைத் திருப்பித் தந்து விடுவதே சரியான முறை, க்ஷேமத்துக்கு வழி என்று நாம் முந்தியே சொன்னோம். நான் உமக்குக் கடன் பட்டிருக்கிறேன். என் பிராணன், பொருள், குடும்பம் அனைத்தையும் யுத்தத்தில் ஆஹுதியாகப்பெய்து எரித்து விடுவதற்குச் சம்மதம், நான் சேனையுடன் செல்கிறேன்" என்றான்.

பெருஞ் சேனைக்கு உத்தர விட்டான். எல்லாம் தயாராக இருந்தது. நகரத்தில் ஹோமம், சாந்தி பிராம்மண பூஜை எல்லாம் நடத்தப்பட்டன. காற்றெல்லாம் பரிமளம் நிரம்பிற்று. பிறகு பேரிகை கோஷத்துடன் பிரஹஸ்தன் புறப்பட்டான்.

அவலக்ஷண சகுனங்கள் காணப் பட்டன. அவற்றைக் கவனியாமல் சென்றான். பிரஹஸ்தன் தலைமையில் பெருஞ்சேனை கோட்டையை விட்டுக் கிழக்கு வாயிலின் வழி வெளி வந்ததைக் கண்டதும் வானரர்கள் கர்ஜித்து யுத்தத்துக்குச் சன்னத்தமானார்கள்.

நெருப்பில் பூச்சிகள் ஆவேசமாக விழுவது போல் பிரஹஸ்தன் தலைமையில் ராக்ஷசர்கள் வானர சேனையின் மேல் பாய்ந்தார்கள்.

"அங்கே வருகிறானே பெருங்கூட்டத்துடன் அந்த ராக்ஷசன் யார்?" என்றான் ராமன்.

"அவன்தான் பிரஹஸ்தன், ராவணனுடைய சேனாபதி. லங்கா சேனைகளில் மூன்றில் ஒரு பாகம் இவன் ஆதிக்கம்" என்றான் விபீஷணன்.

பிறகு மலையும் மரமுமே ஆயுதமாகக் கொண்ட வானரர்களுக்கும், சக்தி, சூலம், ஈட்டி, கோடாலி, தடிகள் முதலிய ஆயுதங்களை எடுத்து வந்த ராக்ஷசப் பெருஞ் சேனைக்கும் கோர யுத்தம் நடந்தது. கல் மாரியும் சரமாரியும் பொழிந்தும் கை கலந்தும் யுத்தம் செய்தார்கள். எண்ணற்ற

வானரர்களும் அரக்கர்களும் மாண்டார்கள்.

பிரஹஸ்தனுடைய வீரர்களான நராந்தகன், மகாநாதன், கும்பஹனு முதலியவர்களை துவிவிதன், துர்முகன், ஜாம்பவான் ஆகிய வீரர்கள் எதிர்த்துக் கொன்றார்கள். அதன் மேல் பிரஹஸ்தனுக்கும் நீலனுக்கும் கடும்போர் வெகு நேரம் நடந்தது.

முடிவில் பிரஹஸ்தன் ஒரு இரும்பு உலக்கையை எடுத்துக் கொண்டு நீலன் மேல் பாய்ந்தான். உடனே நீலன் ஒரு பெரிய பாறையைப் பெயர்த் தெடுத்து பிரஹஸ்தன் தலையை நொறுக்கி விட்டான். ராக்ஷச வீரர்கள் மூலைக்கு மூலை ஓடினார்கள். இவ்வாறு பெரும் வெற்றியடைந்த நீலன் ராம லக்ஷ்மணர்கள் இருந்த இடம் சென்று நமஸ்கரித்து நடந்த போரைப் பற்றிச் சொன்னான். ராம லக்ஷ்மணர்களும் நீலனுடைய சௌர்யத்தை மிகவும் பாராட்டி உபசரித்தார்கள்.

மகாபாரதம், ராமாயணம் இரண்டிலுமே யுத்த காண்டக் கதை. சுவர்ச்சியின்றி நீடித்து ஒரே வித சித்திரம் திரும்பத் திரும்ப வரும். அதை நான் சுருக்கமாகவே சொல்லி முடிக்கிறேன். ஆயினும் சொல்லில் சுருக்கமாக இருப்பதனால் யுத்தம் சுருக்கமாக முடிந்து விட்டதாக எண்ணக் கூடாது. ஆயுதங்களும் காயங்களும் ரத்தப் பிரவாகமும் உயிர்ச் சேதமும் ரகளையும் பிரம்மாண்டமாகத்தான் இருந்தன.

அக்கினி புத்திரனான நீலன் பிரஹஸ்தனைக் கொன்று விட்டான் என்கிற செய்தியை யுத்தகளத்திலிருந்து சிதறி ஓடினவர்கள் அரக்க அரசனுக்குத் தெரிவித்தார்கள். அவனுடைய கோபம் பொங்கிக் கிளம்பிற்று. "இந்திரனையும் அவன் தேவப் படையையும் ஜெயிக்க வல்ல என் சேனாபதி பிரஹஸ்தன் இந்த வானரர்களால் கொல்லப்பட்டான். இனி அலட்சியம் செய்வதற்கில்லை. இந்த ராம லக்ஷ்மணர்களையும் அவர்களுடைய குரங்குப் படையையும் நிர்மூலம் செய்து விட வேண்டும்" என்று, தானே தேர் ஏறி பூதகணங்களால் சூழப்பட்ட ருத்திரனைப் போல் சென்றான். தகதகவென்று ஜொலித்த தேரில் நகரத்தை விட்டு வெளியேறினதும் அலை கடலைப் போல் சப்தித்துக் கொண்டு நின்ற வானரச் சேனையைக் கண்டான்.

ராவணன் தலைமையில் அரக்கர்படை வந்ததைக் கண்டதும் வானரர்கள் கையில் மரங்களும் கற்பாறைகளுமாக ஆயத்தமாக நின்றார்கள். வந்த அரக்க வீரர்களைப் பற்றி விபீஷணன் ராமனுக்கு எடுத்துச் சொன்னான். 'அதோ அந்தத் தேரின்மேல் பாலசூரியனைப் போல பிரகாசிக்கிறானே அவனே இந்திரஜித்து' என்று. இவ்வாறு பலரைச் சொல்லி, 'அதோ அந்தப் பெருந் தேரில் சூரிய தேஜஸுடன் நிற்கும் தசமுகன் அவனே ராவணன்' என்றான். ராமனும் ராவணனுடைய வடிவத்தையும் பிரகாசத்தையும் கண்டு வியந்தான். "மகா வீரன், மகா பலவான் என்பதில் சந்தேகமில்லை. பாபியான இவனை ஒழிப்பேன்" என்றான்.

ராவணன் பல வானரர்களைத் தாக்கி, அவர்களை விழ்த்தினான். நீலன் ராவணனைப் பலவாறு எதிர்த்து இம்சை செய்தான். ராவணனும் முடிவில் அவனை அக்கினி அஸ்திரம் செலுத்தி நினைவு இழந்து விழச்செய்தான். ஹனுமான் ராவணனைப் பலமாக எதிர்த்தான். பெரிய முஷ்டியுத்தம் நடந்தது. ராவணன் அசையவில்லை. எதிர்த்த வானர வீரர்கள் ராவணனுடைய பாணங்களால் அடிபட்டு பிரக்ஞை இழந்து விழுந்தார்கள்.

பிறகு லக்ஷ்மணனுக்கும் ராவணனுக்கும் போர் நடந்தது. லக்ஷ்மணனும் நினைவு அற்று விழுந்தான். இதைக் கண்ட ஹனுமான் இடையில் புகுந்து லக்ஷ்மணனை எடுத்து ராமனிடம் கொண்டு போய்ச் சேர்த்து விட்டான். பிறகு ராமனே ஹனுமானுடைய தோளின் மேல் ஏறி ராவணனுடன் யுத்தம் செய்தான். ராக்ஷசேந்திரன் பலமாகத் தாக்கப்பட்டான். கிரீடம் உடைந்து, தேரிழந்து, ஆயுதம் இழந்து, ஒன்றும் செய்ய முடியாத நிலையில் நின்றான்.

"இன்று தப்பிப் போ. நன்றாகவே யுத்தம் செய்தாய். திரும்பிப் போய் இளைப்பாறி, நாளை ஆயுதம் எடுத்துக் கொண்டு மறுபடி, வா" என்று ராமசந்திரன் சொன்னான். ராவணனும் அவமானப் பட்டு நகரத்துக்குள் திரும்பிச் சென்றான்.

யுத்த பூமியில் ராவணன் கிரீடம்

---

"வரவரக் காலண்டரில் எதைத் தான் போடறதுன்னு இல்லாமல் போயிடுச்சு!"

"என்ன போட்டிருக்கு?"

"கட்சியை உடைக்க நல்ல நாள்னு போட்டிருக்கு!"

– வேதபுரி எஸ். ரமேஷ்



உடைந்து அவமானப்பட்டுக் கோட்டைக்குத் திரும்பிப் போவதைக் கண்ட தேவர்கள் சந்தோஷமடைந்து ஆரவாரம் செய்தார்கள். 'நம்முடைய கஷ்டங்கள் தீரும் காலம் சமீபித்தது' என்று ஆனந்தமடைந்தார்கள்.

ராவணனோ மானபங்கமடைந்து மிகக் கவலை கொண்டவனாகக் கோட்டைக்குள் புகுந்தான். ஆலோசித்து மனத்தை ஸ்திரப் படுத்திக் கொண்டு தம்பி கும்பகர்ணனை எழுப்பச் சொல்லி உத்தரவிட்டான்.

கும்பகர்ணன் தான் அடைந்த சாபத்தால் மாதக் கணக்காகத் தூங்கிப் போவான். ராவணன் அவமானப் பட்டுத் திரும்பிய போது கும்பகர்ணன் படுக்கப் போய்ச் சில நாட்களே ஆனபடியால், அந்த இனத் தூக்கத்திலிருந்து அவனைச் கலபமாக எழுப்பக் கூடும் என்று ராவணன் தீர்மானித்து, "எப்படியாவது தம்பியைத் தூக்கத்தினின்று எழுப்பி யுத்தத்துக்குத் தயாராகும்படி செய்யுங்கள்" என்று தன் மந்திரிகளுக்கு உத்தரவிட்டான்.

"என் தவங்களெல்லாம் வீணாயிற்று. ரிஷிகள் சொன்னது உண்மையாகும் போலிருக்கிறது. கோட்டையை எல்லா பாகங்களிலும் வீரர்கள் கவனமாகக் காவலிருந்து பார்த்துக் கொள்ளச் சொல்வீர்களாக. தம்பி சுகமாகத் தூங்குகிறான். அவன் தூக்கம் மாதங்கள் கணக்காக இருக்குமே. அவன் படுத்து, இன்று ஒன்பது தினங்கள் தானாயின. அவனை உடனே எழுப்பி விடுங்கள். அவன் யுத்தத்துக்குச் சென்றால் இந்த எதிரிகள் சிதறி ஓடுவார்கள். கும்பகர்ணனுக்கு எதிரில் யார் நிற்க முடியும்? அவன் எழுந்து போருக்கு நின்று விட்டால் எனக்கு ஒரு பயமுமில்லை. நான் கவலைப் படுகிறேன் என்பது அவன் அறியவில்லை, தூங்குகிறான்."

இப்படி ராவணன் சொன்னதும் ஆட்கள் கும்பகர்ணனுடைய அரண்மனைக்குச் சென்றார்கள். அவன் எழுந்ததும் அவனுக்கு அடங்காத பசியாக இருக்கும் என்று ஆகாரம் தயாரித்து மலையாகக் குவித்து வைத்தார்கள். பிறகு அவனை எழுப்புவதற்காக அநேக பேரிகை, சங்குகள் முதலியவைகளைக் கொண்டு பெரிய சத்தம் போட்டார்கள். பல அரக்கர்கள் கூடி அவனைத் தட்டிக் குத்தித் தள்ளினார்கள். அவர்கள் போட்ட இரைச்சலும் பேரிகை, சங்கம் முதலிய கோஷங்களும் ஆகாயமளாவிச் சென்றன. பறவைகளும் மிருகங்களும் பயந்து கத்தின.

(தொடரும்)



குவைத் மருத்துவமனைகளில் நமது இந்திய டாக்டர்கள்தான் நிறையப் பேர் பணியாற்றுகிறார்கள் என்றாலும் மருத்துவமனைகளின் நிலை நம்மூர் மாதிரி கிடையாது. சுத்தமென்றால் அப்படியோர் சுத்தம். ராஜமரியாதை போன்று சிகிச்சை! அரசாங்க மருத்துவமனைகள் இருபத்து நான்கு மணி நேரமும் இயங்குகின்றன. டாக்டர்கள் இல்லை என்கிற பேச்சே கிடையாது. எல்லா வசதிகளும் உபகரணங்களும் உண்டு. பணக்காரன் - ஏழை என்கிற பாகுபாடில்லாமல் சிகிச்சையளிக்கிறார்கள். குவைத்தில் ரெஸிடெண்ட் பர்மிட் பெற்றிருக்கும் எல்லோருக்குமே மருத்துவ சிகிச்சையும் மருந்துகளும் இலவசம். எக்ஸ்-ரே மற்றும் இதர பரிசோதனைகளும் இலவசம்.

பெண்கள் பிரசவத்திற்காக மருத்துவமனைக்குப் போய் விட்டால் பிரசவம் முடிந்து வீட்டுக்குத் திரும்பும் வரை எல்லாமே இலவசம்தான். (அன்பளிப்பு என்கிற பேச்சே கிடையாது.) மக்கள் தொகை வளர்க்க, ஐந்து குழந்தைகள் வரை பெற்றுக் கொள்ள அரசாங்கமே குவைத்தியர்களை ஊக்குவிக்கிறது.

கணவன் விரும்பினால் மனைவியின் டெலிவரியை அருகிலிருந்து பார்க்கலாம். மனைவியின் பிரசவத்தின் போது இங்கே கணவனுக்கும் மூன்று நாள் விடுமுறை தருகிறார்கள்.

இங்கு வேலைக்காக வந்து காண்ட்ராக்ட் முடிந்து கிளம்புவதற்கு முதல் நாள் உடல்நலம் சரியில்லாமல் போவதாக வைத்துக் கொள்வோம். அப்போதும் அடுத்த நாள் விமானம் ஏறப் போகிறவர்தானே என்று குவைத் அரசு நினைப்பதில்லை. உடனடியாகச் சம்பந்தப்பட்டவருடைய விசாவை நீட்டித்து, அவருடைய வியாதி எத்தனை பெரிய வியாதியாக இருந்தாலும் சரிசெய்த பிறகே அனுப்புகிறார்கள். தேவையானால் அவரை வெளிநாட்டுக்கு அனுப்பி சிகிச்சையளித்த பிறகே தாய்நாட்டுக்குத் திருப்பியனுப்புகிறார்கள்! இப்போது மிக மிகப் பெரிய சிகிச்சைகளுக்கு மட்டும் மிகக் குறைந்த அளவிலான ஒரு தொகையைக் கட்டணமாக வசூலிக்கிறது குவைத் அரசு.

"இங்குள்ள அரசு மருத்துவமனைகளில் டாக்டர்களாகப் பணிபுரிபவர்கள் சொந்தமாக பிராக்டீஸ் பண்ண முடியாது; கூடாது. அரசு மருத்துவமனைகளின் சுத்தத்தையும் டாக்டர்களின் கவனிப்பையும் பார்க்கிற நோயாளிகளுக்கு அந்த சந்தோஷத்திலேயே பாதி நோய் குணமாகி விடும்!" என்கிறார் இங்கே பணிபுரியும் திருநெல்வேலியைச் சேர்ந்தவரான டாக்டர் உஷா ராஜாராம். சதாம் படையெடுப்பின் போது, இங்குள்ள ஆஸ்பத்திரிகளில் புகுந்து, இன்குபேட்டரில் வைக்கப்பட்டிருந்த கைக் குழந்தைகளைக் கூட ஈராக் ராணுவம் வெளியே எடுத்து எறிந்து நாசம் செய்தது. பிறகு விசாரிக்க வந்த அமெரிக்கன் டீமிடம் அந்தக் கொடுமைகளையெல்லாம் ஆங்கிலத்தில் கவிதையாய் வடித்துத் தந்தவர் இவர். ஈராக் ஆக்ரமிப்பின் போது எண்ணெய்க் கிணறுகள் எரிக்கப்பட்டுப் புகைந்ததால் காற்று அசுத்தமாகி ஆஸ்துமா வியாதி அதிகமாகியிருந்தது. இங்குள்ளவர்கள் நெருங்கிய உறவுகளிலேயே திருமணம் புரிந்து கொள்வதால் பரம்பரை வியாதிகள் தொடர்ந்து வருவதும் அதிகம். தவிர, சர்க்கரை வியாதியும், பல் வியாதியும் அதிகம்.

— விசாலம் மணி, பிரேமா சுப்புராமன்



# மனைவிக்குப் பிரசவமா?... கணவனுக்கும் விடுமுறை!

# பிரதோஷ காலம்–
# பிரதோஷ வரலாறு

சுக்கில பக்ஷம், கிருஷ்ண பக்ஷம் என்னும் இரண்டு பக்ஷத்திலும் வருகின்ற திரயோதசி திதியில் சூரியாஸ்தமனத்திற்கு முன் மூன்றே முக்கால் நாழிகையும், பின் மூன்றே முக்கால் நாழிகையுமாய் உள்ள காலமே பிரதோஷம் எனப்படும்.

## பிரதோஷ வரலாறு

### தசமி திதியன்று (பத்தாவது நாள்) நடந்தது:

தசமி திதி அன்று ஒருவேளை உண்டு இந்திராதி தேவர்களும் அசுரர்களும் மந்திரகிரியை மத்தாகவும், வாசுகி என்ற நாகராஜனைத் தாம்புக் கயிறாகவும் அமைத்தார்கள். அசுரர்கள் தலைப்புறமாகவும், தேவர்கள் வால்புறமாகவும் நின்று அமிர்தம் கடையலானார்கள். கடைந்தபோது வாசுகி நஞ்சை உமிழ்ந்தது. கடலில் இருந்தும் நஞ்சு தோன்றியது. வாசுகி கக்கிய ஆலமும் கடலில் தோன்றிய ஆலமும் ஒன்று சேர்ந்து ஆலாலம் எனப் பேர் பெற்றது. அக்கொடிய விடத்தை வானவர்கள் விருப்பப்படி அடியவர்களாகிய அமரர்கள் உய்ய அமுதம் போல் சிவபெருமான் உண்டருளினார்.

### ஏகாதசி திதியன்று (பதினோராவது நாள்) நடந்தது:

சிவபெருமான் சொற்படி தேவர்கள் மறுபடியும் பாற்கடலைக் கடைந்தார்கள். ஏகாதசியன்று பகல் முழுவதும் பட்டினி இருந்து இரவு முழுவதும் உறக்கமின்றி பாற்கடலைக் கடைந்தார்கள்.

### துவாதசியன்று நடந்தது (பன்னிரண்டாவது நாள்):

துவாதசியன்று அதிகாலையில் அமிர்தம் கிடைத்தது. அதைத் தேவர்கள் பகிர்ந்து உண்டார்கள். அந்த மகிழ்ச்சியில் தேவர்கள் துவாதசியன்று ஆடியும் பாடியும் பொழுதைப் போக்கினார்கள்.

### திரயோதசி அன்று நடந்தது (பதிமூன்றாம் நாள்):

தேவர்கள் சிவபெருமானை முன்னாலே வணங்காது பொழுது போக்கிய தங்கள் குற்றத்தை உணர்ந்து சிவபெருமானிடம் பணிந்து தங்கள் குற்றத்தை மன்னித்தருளுமாறு வேண்டினார்கள்.

பரம கருணாநிதியாகிய சிவபெருமான் மகிழ்ந்து தேவர்களுக்கு அருள் புரியத் திருவுளம் கொண்டு கயிலையில் அன்று மாலை (4.30 மணி முதல் 6.00 மணி வரை.) பிரதோஷ வேளையில் தவத்திரு முன் இருந்த ரிஷப தேவரின் இரு கொம்புகளுக்கிடையில் நின்று அம்பிகையைக் காணத் திருநடம் செய்தருளினார். தேவர்கள் அதனைத்

தரிசித்து சிவபெருமானை துதி செய்து வணங்கினார்கள். அது முதல் திரயோதசி திதியன்று மாலை நேரம் பிரதோஷம் ரஜனி முக வேளை பாபத்தை போக்கும் நேரம்.

## பிரதோஷ பூஜாபலன்:

சிவ மூர்த்திக்குரிய பல வித விரதங்களில் தலையாயது. இவ் விரதத்தை அநுஷ்டிப்போர் துன்பங்களினின்றும் நீங்கி இன்பத்தை எய்துவர்.

## பிரதோஷ மகிமை:

* சிவபெருமான் பிரதோஷ காலத்தில் இடப தேவரின் இரு கொம்புகளுக்கிடையே உயிர்கள் உய்யும் பொருட்டு திருநடம் புரிந்தார். அப்போது சரஸ்வதி வீணை வாசித்தாள். இந்திரன் புல்லாங்குழல் ஊதினார். பிரம்ம தேவர் தாளம் போட்டார். இலட்சுமி தேவி பாடினாள். திருமால் மிருதங்கம் வாசித்தார். தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள், திசை பாலர்கள் முதலிய அனைவரும் வந்து பிரதோஷ காலத்தில் இறைவனை வழிபடுகிறார்கள்.



## சென்ஸார் ஜோக் :

**பரிசு ரூ.250**

“ஆபாச வன்முறைக் காட்சிகளை வெட்டினால் என்ன? தாராளமாக வெட்டலாம்” என்கிறார் டைரக்டர் விசு. மறுபக்கம் திரைப்படப் பிரபலங்கள் சென்ஸார் கெடுபிடியை எதிர்த்து ஊர்வலம் போகின்றனர்!” அரசுக் கொள்கை எப்படியோ, அப்படித்தானே நாங்கள் செயல்பட முடியும்?” என்று கேட்கிறது திரைப்படத் தணிக்கைக் குழு.

“நல்ல தமாஷ்” என்று தோன்றுகிறதா? அப்படியானால் ‘சென்ஸார் ஜோக்’ எழுதுங்களேன்! சினிமா உலகுடன் சம்பந்தப்பட்டவர் சம்பந்தப்படாதவர் என்று யார் வேணுமானாலும் ஜோக்கில் இடம்பெறலாம். இரண்டே நிபந்தனைகள் : ‘சென்ஸார்’ என்ற வார்த்தை பயன்படுத்தப்பட வேண்டும். நாங்கள் சென்ஸார் செய்யும்படி ஜோக் அமைந்திருக்கக் கூடாது!

ஆசிரியர் தீர்ப்புப்படி சிறந்ததற்குப் பரிசு ரூ. 250/-. ஆறுதல் பரிசுகள் உண்டு. முடிவுதேதி : *6.8.94.*

ஜோக்கை ரத்தினச் சுருக்கமாக தனித் தாளில் எழுதி இதுள்ள முகவரி கூப்பனில் உங்கள் விலாசத்தை எழுதி இணைத்து அனுப்புங்கள்.

உறை மீது *“சென்ஸார் ஜோக்”* என்று குறிப்பிடவும்.

என் பெயர் : ...........................................

விலாசம் : ...........................................

...........................................

## பிரபலங்களைக் கண்டுபிடியுங்கள் - போட்டி முடிவு!

**சரியான விடைகள் :** *1.* **ஸ்ரீதேவி**, *2.* *சார்லஸ், 3. பாலமுரளி கிருஷ்ணா, 4. கமலஹாசன், 5. மு. கருணாநிதி.*

ஐந்து பெயர்களையும் சரியாக வரிசைப்படுத்தி எழுதியவர்கள் *24* வாசகர்கள்.



குலுக்கல் முறையில் ரூ 250/- பரிசு பெறுபவர்:
புவனேசுவரி,
D/15, ஹவுசிங்
போர்டு,
நாராயணநகர்,
சேலம் - *636 015.*

இதர வாசகர்களின் பெயர், விலாசங்கள் : 1. ஷோபா சப்தரிஷி, இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, ஒசூர், தர்மபுரி மாவட்டம்; 2. கே. சுந்தர்ராஜ், 40, வைத்திய நாத முதலி தெரு, தண்டையார்பேட்டை, சென்னை - 81; 3. புவனேஷ், 43, பழைய மார்க்கெட் தெரு, வ.உ.சி. மார்க்கெட் பின்புறம், சேலம் - 1; 4. சி.வி. சிவசுப்பிரமணியன், நெ. 7, அபிராமி தெரு, புரசைவாக்கம், சென்னை-84; 5. ராஜி தனராஜ், 135, காமராசர் சாலை, மதுரை - 9; 6. நரசிம்மன், 73/5 லஸ் சர்ச் சாலை, மைலாப்பூர், சென்னை - 4; 7. ராஜாராம், 162, 8-வது குறுக்குத் தெரு, செந்தில் நகர், கொளத்தூர், சென்னை - 99; 8. சி. சாந்தி, 6/98, பொன்னே கவுண்டன்புதூர் போஸ்ட், கோவை மாவட்டம்; 9. அ. வெங்கடேஷ், 1, மீனாக்ஷிபுரம் சந்து, தெற்கு வெளி வீதி, மதுரை - 1; 10. ராதா வெங்கட்ராமன், 1127D, பொப்பிலி ராஜா சாலை, கே. கே.நகர், சென்னை - 78; 11. எஸ். சபேசன், 17, கந்தன் தெரு, பெரம்பூர், சென்னை - 600 011; 12. வத்சலா வேணுகோபால், 135, திரு.வி.க. வீதி, முனிசிபல் காலனி, ஈரோடு - 4; 13. அ. மாலதி, 3, ராஜாம்பாள் நகர், மஞ்சக்குப்பம், கடலூர் - 1; 14. ஈ. சிவா மற்றும் ஈ. பழனி, 82, நரசிங்கபுரம் விரிவுப் பகுதி, 6-வது தெரு, கிண்டி, சென்னை - 32; 15. மாலதி நாகராஜன், B-411, எக்ஸ்பிரஸ் அபார்ட்மெண்ட்ஸ், லக்டிகாபுல், ஹைதராபாத் -4; 16. சிரு. வயிரவன், 10, ஜகதாம்பா காலனி, இராயப் பேட்டை, சென்னை - 14; 17. ஜே. குமார விஜயம், 103, எல்லையம்மன் காலனி, கோபாலபுரம் போஸ்ட், சென்னை - 86; 18. சத்யபாமா வரதராஜன், 112 (மாடி), S.B.M. காலனி, பனசங்கரி முதல் ஸ்டேஜ், பெங்களூர் - 50; 19. சி. எஸ். ராம்மோகன், 21, 2-வது குறுக்கு தெரு, தெற்கு மாட வீதி, பாடி, சென்னை - 5; 20. ஏ. சர்வலிங்கம், D/11/6 டி.என். எச்.பி. காலனி, பாகலூர் ரோடு, ஓசூர், தர்மபுரி மாவட்டம்; 21. எஸ். பிரபாகரன் நியூஸ் பேப்பர் மார்ட், காந்தி சிலை அருகில், ராபர்ட்சன் பேட்டை, கோலார் தங்கவயல் - 563 122; 22. கே. எஸ். சுந்தரம், 15, 5-வது மெயின் தெரு, முருகேசபாளைய கே. ஆர். கார்டன், பெங்களூர் 17; 23. க. காயத்ரி, 786/3, சந்தோஷ் அபார்ட்மெண்ட்ஸ், டாக்டர். ஏ. ஆர். முதலியார் சாலை, கே. கே. நகர், சென்னை - 78.



• திருச்சி ஹோட்

குவைத்தில் நல்ல வேலை கிடைத்துச் செல்பவர்களுக்கு உடனடியாக எழுவது சாப்பாட்டுப் பிரச்னைதான். அதைப் புரிந்து கொண்டு முதன் முதலில் குவைத்தில் தமிழக உணவைத் தமது தீனு மெஸ் மூலம் அறிமுகப்படுத்தியவர், தஞ்சை மாவட்டத்துக்காரரான தீனு.

"தமிழர்களின் நலனுக்காக ஒரு நற்பணி மன்றம் தேவை என்று நான் முதலில் கலைஞர் நற்பணி மன்றத்தைத் துவக்கிய போது, அதுவோர் அரசியல் கட்சி என்று சொல்லி என்னை ஜெயிலில் தள்ளப் பார்த்தனர். அது அரசியல் கட்சி அல்ல; தமிழர்களுக்கான நற்பணி மன்றம் தான் என்பதை விளக்கிச் சொல்வதற்குள் எனக்குப் போதும் போதுமென்றாகி விட்டது!" என்கிறார் தீனு.

இவரைப் போலவே நம்மூர் அயிட்டங்களுக்காகத் திருச்சி ஹோட்டலை நடத்தி வருபவர் பாவா சாஹிப். இங்கு மெஸ்ஸானாலும் ஹோட்டலானாலும் வேறு எந்தத் தொழிலானாலும் வெளிநாட்டுக்காரர்கள் தனியாகத் துவங்க முடியாது. உள்ளூர் குவைத்தி ஒருவரின் கூட்டுறவுடன்தான் துவங்க முடியும்!

இவரது ஹோட்டலுக்குக் குவைத்தியர்களும் வந்து நம்மூர் அயிட்டங்களை விரும்பிச் சாப்பிடுவது இன்னொரு சிறப்பு.



• ராமசாமி ரெட்டியார்



• தீனு

குவைத்திலுள்ள முக்கிய தமிழர்களில் கோவில்பட்டியைச் சேர்ந்த ராமசாமி ரெட்டியாரும் ஒருவர். குவைத் பார்ட்னர் ஒருவருடன் ஓவர்ஹெட் டிரான்ஸ்மிஷன், டெலிகம்யூனிகேஷன், சிவில் ஒர்க் போன்ற வேலைகளைத் திறம்படச் செய்யும் கம்பெனியை நடத்தி வருபவர் இவர்.

சதாமின் படையெடுப்பால் ஏற்பட்ட பாதிப்புக்குப் பிறகு, குவைத்தின் எலக்ட்ரிக் மற்றும் டெலிகம்யூனிகேஷன் தொடர்புகள் உயிர் பெற்றதற்கு இவரது கம்பெனியும் ஒரு முக்கிய காரணம்.

சண்டையின் போது, தம்மிடம் வேலை செய்யும் ஐநூறு பேரையும் பத்திரமாகத் தாயகத்திற்குத் திருப்பியனுப்பிய பிறகே இவர் அங்கிருந்து புறப்பட்டார் என்பது இவரது வேலைத் திறனையும் விஞ்சி நிற்கும் மனிதாபிமானத்திற்குச் சான்று!

# கடல் தாண்டிக் காலூன்றிய தமிழர்கள்!

அண்ணா மேம்பாலம், சிதம்பரம் ஸ்டேடியம், ஸ்பிக்பில்டிங் போன்றவற்றைக் கட்டிய ஈஸ்ட் இண்டியா கன்ஸ்ட்ரக்ஷன் குரூப், குவைத் உள்பட மொத்தம் பதினேழு நாடுகளில் தங்கள் கிளைகளை ஏற்படுத்தி ஏற்றுமதி - இறக்குமதி வியாபாரம் செய்வது போக, இப்போது இந்தியாவிலிருந்து துணிகளை வரவழைத்து, குவைத்தில் தைத்து, அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்யப் போகிறது.

"இதையேன் இந்தியாவிலிருந்தபடியே செய்யக் கூடாது?" என்ற போது, "இந்தியாவில் கோட்டா கிடைப்பது பெரும்பாடு. வரிப் பிரச்னை வேறு. குவைத்தில் அரசாங்க இடையூறு என்பது சுத்தமாகக் கிடையாதே! அதனால்தான்!" என்கிறார் குவைத் கிளையின் ஜெனரல் மானேஜரான சையத் புகாரி.

குவைத் நேஷனல் பெட்ரோலியம் கம்பெனியின் மூன்று கிளைகளில் ஒன்றை நிர்வகிக்கும் பொறுப்பை அடுத்த ஐந்தாண்டுகளுக்கு நம்மூர் ஸ்பிக் ஏற்றுக் கொண்டிருக்கிறது. அமெரிக்கா மற்றும் பிரிட்டனைச் சேர்ந்த பெரிய பெரிய கம்பெனிகளோடு போட்டியிட்டு இந்தப் பொறுப்பைப் பெற்றிருக்கிறது ஸ்பிக். வருமானம் சுமார் 125 கோடி. இதன் மூலம் ஆயிரம் பேருக்கு மேல் வேலை வாய்ப்புக் கிடைக்கும். அந்த வாய்ப்பு முழுக்க முழுக்கத் தமிழர்களுக்கே கிடைக்கப் போகிறது என்பது இன்னொரு சந்தோஷச் செய்தி!

**- இளமாறன், குமாரசாமி, அருள்மொழி மோகன், சுதர்ஸன், சுப்புராமன்.**



• டிரைவிங் லைசென்ஸ் : அத்தனை சுலபமானதல்ல

வில் மெடிகல், எஞ்ஜினியரிங் கல்லூரிகளில் சேரவும் உதவிக் கொண்டிருக்கிறது காமராஜர் ப. கழகம்.

கல்லூரிக் கல்விக்கு இத்தனை வாய்ப்பு இருந்தாலும் நமது குழந்தைகளுக்கான பள்ளிக் கல்வியின் நிலை எப்படியிருக்கிறது? அங்குள்ள இந்தியன் பள்ளியில் ஆசிரியையாக இருக்கும் ரமா முத்து கிருஷ்ணனிடம் பேசினோம்.

# குவைத்தில் கல்வி!

குடும்பத்தைப் பிரிந்து குவைத் வந்தவர்கள், பணி நேரம் முடிந்த பிறகு பொழுதைப் பிடித்துத் தள்ள அவஸ்தைப்பட வேண்டாம். எம்.பி.ஏ. முதற்கொண்டு எண்பது விதமான கோர்ஸ்களைப் பார்ட்டைமாகச் செய்யும் வசதியைக் கடந்த ஆண்டு இங்கே ஏற்படுத்தித் தந்தது மதுரை காமராஜர் பல்கலைக் கழகம். எல்லா கோர்ஸ்களுக்கான தேர்வுகளையும் குவைத்திலிருந்தபடியே எழுதலாம்.

குவைத்தில் பன்னிரண்டாம் வகுப்புப் படித்த நமது மாணவர்களுக்குப் பயிற்சியளித்து, என்.ஆர்.ஐ. கோட்டாவில் இந்தியா

"இங்கே பள்ளிகளுக்குப் பஞ்சமில்லை. நிறைய இந்தியன் பள்ளிகள் உள்ளன. இந்தியன் பள்ளிகளில் CBSE பாடத் திட்டங்கள்தான். ஆசிரியர்கள் சிறப்பாகப் பணியாற்ற வேண்டும் என்பதற்காக, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின்

ஈவ் டீஸிங் இல்லை



• ரம்யா

காப்பியடித்தல் இல்லவே இல்லை!



• பல்லவி



• பிரதீப்

ஹோம் ஒர்க் இல்லை



• திலீப்

டியூஷன் கிளாஸ் இல்லை

மூலம் அஞ்சல் வழியில் பி.எட். படிக்க வைக்கிறார்கள். எனவே, தகுதியான ஆசிரியர்களுக்கும் பஞ்சமில்லை. இருப்பினும் மாணவர்களிடையே போட்டி மனப்பான்மையோ, கஷ்டப்பட்டுப் படித்தாக வேண்டிய மனநிலையோ இல்லாததால் அவர்களுக்குப் படிப்பின் அருமை தெரிவதில்லை. அதனால், தாய் நாட்டில் படிக்கும் மாணவர்கள் அளவுக்கு இவர்களின் திறமை உயர்வதில்லை என்பது வாஸ்தவம்தான்!" என்கிறார் அவர்.

சரி, மாணவ-மாணவியர் எப்படி உணர்கிறார்கள்? "இங்கே ஈவ் டீஸிங் கிடையாது. அனைவரும் சகோதர பாசத்துடன் பழகுகின்றனர். நம்மூர் மாதிரி இங்குள்ள டீச்சர்கள் ஹோம் ஒர்க்காகக் கொடுத்து போரடிப்பதில்லை. டியூசனுக்கு வா! என்கிற பிரச்னைகூம் இல்லை. சிரத்தை எடுத்துப் பள்ளிகளிலேயே சொல்லித் தருகிறார்கள். பள்ளிகளிலும் வசதிகளுக்குப் பஞ்சமில்லை. லெபாரட்டரியில் ஒவ்வொருவருக்கும் தனித்தனி உபகரணங்கள். காப்பியடிக்கும் மனப்பான்மையும் கிடையாது. மொத்தத்தில் வி. ஆர். வெரி ஹாப்பி!" என்கிறார்கள் மாணவ-மாணவியரான பிரதீப், திலீப், பல்லவி, ரம்யா ஆகியோர்.

குவைத்தில் விழுந்து விழுந்து படித்து டிகிரி மேல் டிகிரி வாங்கிவிடலாம். ஆனால் அங்கு சுலபத்தில் வாங்க முடியாதது, டிரைவிங் லைசென்ஸ்! லஞ்சம் என்கிற பேச்சுக்கே இடமில்லை என்பதால், மெடிகல் டெஸ்டில் பாஸாவதோடு 125 சிக்னல் டெஸ்டுகளில் நிஜமாகவே பாஸாக வேண்டும். இதனால் ஒரே முறையில் பாஸாகி டிரைவிங் லைசென்ஸ் பெற்றவர்கள் ரொம்பவும் அபூர்வம்.



• ரமா முத்துகிருஷ்ணன்

இத்தனைக்கும் மேலாக இங்கே எல்லோரும் டிரைவிங் லைசென்ஸ் பெற்றுவிடவும் முடியாது. தொழில் வழி டிரைவர்கள், டாக்டர்கள், என்ஜினியர்கள், மானேஜர்கள் மட்டும்தான் பெற முடியும்!

— ஆர். லதா,
இளம்பரிதி,
சந்திரன்



## வண்ணத்துப் பூச்சி வேட்டை - ஓர் உன்னதப் படைப்பு!

✉ 'வண்ணத்துப் பூச்சி வேட்டை'யில் ஒரு பெண் மனத்தின் ஆழத்தில் ஏற்படும் உணர்ச்சிகளை வெகு இயல்பாகவும், அழகாகவும் வடித்துவிட்டார் சுஜாதா. பாராட்டுக்கள்.
காட்பாடி, அ.சோ. விஸ்வநாதன்

✉ பெண்கள், ஆண்களுக்கு நிகராகப் பல்வேறு துறைகளில் முன்னேறிக் கொண்டிருந்தாலும், ஆண் ஆதிக்கத்திலிருந்து இன்னும் அவர்கள் விடுபடவில்லை. தவறுகளையும் செய்துவிட்டு, பிறகு அவை வெளிப்படும் போது சமாதான வார்த்தைகள் சொல்லிப் பெண்களை ஏமாற்றும் அர்ஜுன்கள் இன்னும் நிறையவே இருக்கிறார்கள். அவர்களுக்கு ரேகா எடுக்கும் முடிவு ஒரு பாடம்.
தஞ்சாவூர், வெ. முருகானந்தம்

✉ பொழுது போக்குவதற்கு எழுதப்பட்ட கதையல்ல என்பதைக் கதையின் ஒவ்வொரு வரியிலும் முத்திரை பதித்துள்ளார் சுஜாதா. இளைய தலைமுறையினருக்கு - குறிப்பாகப் பெண்களுக்காக - உருவாக்கப்பட்ட உன்னதப் படைப்பு!
சென்னை - 4, ஜ. சாந்து உஸ்மானி

✉ கதையின் முடிவையே தீர்வாக எடுத்துக் கொள்ளாமல் பிரச்னைகளைப் பாடமாக எடுத்துக் கொள்ள வேண்டும்.
டி.வி. நல்லூர், வைத்யா

✉ பாரதி கண்ட புதுமைப் பெண்ணாய் - புரட்சிப் பெண்ணாய் - என் கண்களுக்குத் தெரிகிறாள் சுஜாதாவின் ரேகா. இருபத்தியெட்டு வாரங்கள் எங்களை ஓர் இனிய உலகத்திற்கு அழைத்து சென்று வண்ணத்துப் பூச்சி வேட்டையை ரசிக்க செய்த சுஜாதா... ஓவியர் ஜெ.. இருவருக்கும் தூரத்துக் கைகுலுக்கல்.
திருவண்ணாமலை, என். சண்முகம்

✉ சுஜாதா சார்! பெண்களின் மன நிலையை அறிய கூடு விட்டுக் கூடு பாயும் வித்தையைக் கற்றவரா நீர்? கதையின் முடிவை மகளிர் பெரிதும் விரும்புவார்கள். ரேகா இ கிரேட்!
ஸ்ரீரங்கம், ஆர். கோபாலன்

# புதுவையில் ஆட்சி மாறுமா?

● ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.

? இனி வரும் படங்களில் கதை அம்சம் இராது போலிருக்கே?

! 'க'வுக்குப் பதில் 'ச' இருந்தால் போதும் என்ற நோக்கிலேதான் திரை உலகு உலா் வலம் போகிறது, சென்஍ஸாரை எதிர்த்து!

● கவிட் ரவி, கும்பகோணம்.

? சமீபத்தில் தாங்கள் கேள்விப்பட்ட அதிசய சம்பவம்?



• பாய்ச்சல்

! ஹரித்துவாரில் எட்டு ஆண்டுகளாக ஒரு பசு தொடர்ந்து பால் பொழிகிறதாம். அதுவும் எக்கச்சக்க அளவில். காமதேனு என்று கன்னத்தில் போட்டுக் கொள்கிறார்கள்!

● உ. ர. சங்கர், ஒட்டநத்தம்.

? டெல்லி இ. காங்கிரஸ் பேரணிக்கு ஒரு கோடி ரூபாய் செலவாமே?



• ஆட்டம்

! சே! இ. காங்கிரஸை இவ்வளவு மட்டமா மதிப்பிடுவீங்கன்னு எதிர் பார்க்கலே. மூன்றாண்டுச் சாதனைப் பேரணிக்கு மூன்று கோடியாவது செலவாகாதா என்ன!

● என். முருகேஷ், பெருஞ்சேரி.

? உ.பி.யில் முலாயம் சிங் யாதவ்வுக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடி பற்றி...?



• வழிகாட்டி

! நெருக்கடி என்னமோ இப்போதைக்குத் தீர்ந்து போச்சு. ஆனா, அதுக்குத் தரப்பட்ட விலை முலாயம் சிங் யாதவ்வின் சுயகௌரவம், மானம், மரியாதை.



• விளக்கம் தயார்!

● பி. அழகுசுந்தரம், அருப்புக்கோட்டை.

? 'தி.மு.க. தொண்டர்கள் கட்சிப் பத்திரிகை தவிர வேறு எதுவும் படிக்கக் கூடாது' என்று கருணாநிதி கூறியுள்ளாரே?

! மூளைச் சலவை பல வகை; அதிலே இது ஒரு வகை!

● மு. பாலகுமார், ஸ்ரீவில்லிபுத்தூர்.

? ஜெயலலிதாவிடம் எதை எதிர்பார்த்து அ.தி.மு.க.வில் சேர்ந்திருக்கிறார் டி. ராமச்சந்திரன்?

! அவர் எதிர்பார்த்தது ஏற்கெனவே கிடைத்து விடவில்லை என்று நீங்கள் எப்படி அனுமானிக்கிறீர்கள்?

● த. இளஞ்சேரன், கொளப்பாடு.

? வட கொரியாவின் புதிய அதிபராக கிம்-யாங்-இல் தேர்ந்தெடுக்கப்பட்டது குறித்து?

! அப்பாவைப் போல் அணு ஆயுதத்தில் முரட்டுத் தீவிரம் காட்டாமல், தென்கொரியா போல் பொருளாதார முன்னேற்றம் காண முயற்சி செய்யட்டும்.

● அன்புகதிரேசன், கீழ்கட்டளை.

? உளவு பார்த்த பாக். தூதரகத்தைச் சேர்ந்தவரை வெளியேற்றியதற்காக நம் தூதரகத்தைச் சேர்ந்தவர்களை பாக். சித்திரவதை செய்து அனுப்புவது சரியா?

! தப்புத்தான். ஆனால் இதுபோன்ற சின்ன சச்சரவுகள் பெரிய காஷ்மீர் பிரச்னையைப் பாதிக்க அனுமதிக்கக் கூடாது. இரு நாடுகளுமே சுபிட்சமாக வாழ்ந்து வளம் கொழிக்க அமைதியும் ஆயுதக் குறைப்புமே வழி-மறக்கக் கூடாது.

● ஜி. மாஜினி, சென்னை.

? 'நாடு சீரழிந்ததற்கு திராவிடக் கட்சிகள்தாம் காரணம்' என்று ராமதாஸ் பேட்டியளித்துள்ளாரே?

! இப்படி பேட்டி கொடுத்து விட்டுத் தேர்தல் என்று வரும் போது தி.மு.க.வுடன் கூட்டணியும் வைத்துக் கொள்வார். அதற்கு வேறு விளக்கம் தயாராயிருக்கும்!

☐ ரூ 25 பரிசு பெறுபவர் :
ப. சுப்பிரமணி,
86, கக்கன் காலனி,
திருவெறும்பூர்,
திருச்சி - 620 013.

● ஆர். கார்த்திகேயன், மதுரை.

? நமக்குத் தேவைப்படும் சிகிச்சைகளைத் தாய்நாட்டிலேயே முடித்துக் கொள்ளும் துணை ஜனாதிபதி பற்றி?

! 1. அயல்நாடுகளுக்கு இணையான

மருத்துவ உதவி இங்கும் கிடைக்கும்; 2. நமது டாக்டர்களிடம் நம்பிக்கை உண்டு; 3. நாட்டில் மக்களுக்குக் கிடைக்காத ஸ்பெஷல் சிகிச்சை எனக்குத் தேவையில்லை என்று உணர்த்தும் துணை ஜனாதிபதி வழிகாட்டி.


• சாதனைப் பேரணி


• மூளைச் சலவை


• எதை எதிர்பார்த்து...

● வி. பரமசிவம், மதுரை.

*? "69 சதவீத இட ஒதுக்கீடு இல்லாவிடில் தமிழகம் காஷ்மீர் ஆகி விடும்" என்கிறாரே கே.ஏ.கே.?*

! சட்ட அமைச்சரின் அசட்டையான பேச்சு.

● சிதம்பர சூரியநாராயணன், பெரியகுளம்.

*? அண்ணா பல்கலைக் கழகத் துணை வேந்தரைக் கொலை செய்ய முயற்சி நடந்ததாமே?*

! பார்க்கப் போனால் மலர்ச் செண்டு கொடுத்து மகிழ்ந்திருக்க வேண்டும். அவர் உள்ள நிலவரத்தை நினைவூட்டி அறிக்கை விட்டிருக்கவில்லையெனில் தலைவர்கள் விழித்துக் கொண்டிருக்க மாட்டார்கள். விஷயம் சூடுபிடித்திருக்காது.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

*? "தி.மு.க. ஒன்பது அடி பாய்ந்தால் ஜெயலலிதா 80 அடி பாய்வார்" என்று அமைச்சர் கண்ணப்பன் எதைக் குறிப்பிடுகிறார்?*

! இல்லையா, ஆட்சியில் லஞ்ச ஊழல், சுயதம்பட்டம், முழுபக்க விளம்பரம், விசுவரூப கட்-அவுட் இத்யாதி... இத்யாதி...

● பொன் குமார், சேலம்.

*? நகராட்சித் தேர்தல் நடைபெறுமா?*

! ஐ.ஏ.எஸ். அதிகாரி மலைச்சாமியை மலை போல நம்பியிருக்கோம். பார்ப்போம், நடத்த விடுகிறார்களா என்று.

● ப. சுப்பிரமணி, திருச்சி. ❑

*? மின் கட்டணம் உயர்கிறதாமே?*

! அது அரசியல் பிரச்னை என்று ஆன மட்டும் சொல்லிப் பார்த்தார் ஜெ., உலக வங்கிப் பிரதிநிதிகளிடம். "டோண்ட் கேர்" என்று விட்டார்கள். இப்படியெல்லாம் நஷ்டத்தில் நடந்தால் திட்டங்களுக்கு உலக வங்கி உதவி கிடைக்காதாம். அப்புறம் என்ன? மன்மோகனார் மாதிரி இவரும் வழிக்கு வர வேண்டியதுதான்! விவசாயிகளிடமும் மின்கட்டண வசூல் நடக்கும், சீக்கிரம்.

● ஆர். பாஸ்கர், பவித்திரமாணிக்கம்.

*? டி.ஆர். கட்சி மாறியதால் புதுவையில் ஆட்சி மாறுமா?*

! அது ஸூட்கேஸின் அளவையும் கனத்தையும் பொறுத்திருக்கிறது.

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

*? 'காவல் நிலையங்களில் காதல் திருமணங்களைப் போலீஸார் நடத்தி வைக்கக் கூடாது' என்று அறிவுறுத்தப்பட்டுள்ளதே...*


• நெருக்கடி...

! அப்படியா! காவல் நிலையக் கற்பழிப்பும், மரணங்களுமே போதும் என்று முடிவு கட்டி விட்டார்கள் போல!

● மு.இரவிச்சந்திரன், சேலம்.

*? உலகக் கோப்பை கால்பந்தாட்டத்தில் எந்த நாட்டின் ஆட்டத்தை வெகுவாக ரசித்தீர்கள்?*


• காந்தியவாதி

! பந்தை பல்வேறு விதமாக எதிர்த்தரப்பு கோலுக்குக் கொண்டு செல்லும் லாகவமும் கலையழகும் ஒருபுறமிருக்க, இதாலியின் பாஜியோவும் பாரெஸியும் பெனல்டி ஷாட்களைக் கோட்டை விட்டு விட்டு, ஒருவருக்கு ஒருவர் ஆறுதலளிக்க முயன்ற தருணம் ரொம்ப டச்சிங்.


• மலை போல் நம்பி...

● ஆ. ராமச்சந்திரன், சென்னை.

*? விடுதலைப் போராட்ட வீரர் சிவதாணு பற்றி?*

! நகைச்சுவை நடிப்பு, மிஞ்சிய நேரத்தில் சமுதாயப் பணி இவை தவிர வேறு எதையும் தமக்கென்று அடைய ஆசைப்படாத இந்தக் கதர் சட்டைக்காரர் மெய்யான காந்திய வாதிதான்.

● அஷ்ரப் அலி, தக்கலை.

*? "மூன்று ஆண்டுச் சாதனைகளை மக்களுக்கு எடுத்துச் சொல்லத்தான் டில்லி பேரணி" என்று ராவ் பேசியிருக்கிறாரே?*

! ஆமாமாம்! பார்வையாளர்களும் ஏன், போலீசும் கூட மயங்கி விழுந்தது வெய்யிலினால் அல்ல; அந்த சாதனைப் பட்டியலைக் கேட்டுத்தான்!

**அட, அப்படியா!**

இங்கு மொத்தம் 80 ஆயிரம் வோட்டுக்கள்தான். ஜெயித்தவர்கள் வோட்டுப் போட்ட அனைவருக்கும் விருந்து கொடுப்பார்கள். சாதாரண விருந்தில்லை - காஸ்ட்லியான ஒட்டக விருந்து!




# வோட்டுப் போட்டால் ஒட்டக விருந்து!

### டௌரிக்கு அரசாங்க லோன்!

ஆண்கள் எத்தனை திருமணம் வேண்டுமானாலும் செய்து கொள்ள வழியிருப்பதால் - கைவிடப்படும் பெண்களின் பாதுகாப்பிற்கு வேண்டி. திருமணத்தின் போது இங்கே ஆண்தான் பெண்ணிற்குப் பணம் தர வேண்டும். நகைகள் போட வேண்டிய பொறுப்பும் கூட ஆணுடையதுதான்! ஆண்களின் இந்த "டௌரி" செலவை எதிர்கொள்ள வேண்டி. திருமணத்தின் போது, அரசாங்கமே அவர்களுக்குக் கடன் தருகிறது!

### மருதாணிக்கு டிமாண்ட்

குவைத்தியர் இப்போது மருதாணி உபயோகிக்கின்றனர். கடைகளில் மருதாணி, பவுடர் ரூபத்தில் நிறையவே கிடைக்கின்றது. சாம்பிராணி, ஊதுபத்தி மேலும் இவர்களுக்கு நாட்டம் அதிகம். ஏக டிமாண்ட்.

### கரண்ட் பில் பாக்கியா...?

### கம்ப்யூட்டர் சொல்லி விடும்!

நாம் ஊர் திரும்ப வேண்டும் என்று ஏர்போர்ட்டுக்கு வந்தால் நமது சிவில் அடையாள அட்டையை வாங்கிப் பரிசோதிப்பார்கள். அதை கம்ப்யூட்டரில் கொடுத்து நம் காண்ட்ராக்ட் முடிந்ததா, கடன், கரண்ட் பில் பாக்கி இருக்கிறதாவெனச் சோதிப்பார்கள். அப்படி இருந்தால் விமானம் ஏற முடியாது. அதே மாதிரி, வேலை பார்த்த அலுவலகத்திலிருந்து நமக்குப் பாக்கி இருந்தால் அதையும் செட்டில் பண்ணி வாங்கித் தந்து விடுவார்கள்.

### வெற்றிலைக்கு.. நோ

குவைத்தில் வெற்றிலை, புகையிலை தடைசெய்யப்பட்டுள்ளது. அவற்றை மென்று தெருவில் துப்பி அசிங்கம் பண்ணுகிறார்கள் என்பதால்தான் இந்தத் தடை.

### Zoo-வில் காக்கை!

இங்குள்ளவர்களுக்குப் பூனைதான் பிடிக்கும். நாய் என்றால் ஆகாது. அது அசிங்கமான, ஆபாசமான பிராணி என ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். ஆகையால் குவைத்தில் (தெரு நாய் உள்பட) நாயே கிடையாது.

இங்கே காக்கைகளும் கிடையாது. சீதோஷ்ண நிலை அதற்கு ஒத்து வராததுதான் காரணம். அற்புதமான பறவை என மிருகக் காட்சி சாலையில் மட்டும் ஒன்றே ஒன்றை வைத்திருக்கிறார்கள். அதனால் நம் தமிழ்க் குடும்பங்களில் காக்கைக்குச் சோறு வைப்பதாக மன ஆறுதல் படுத்திக் கொண்டு குருவிக்குதான் வைக்கிறார்கள்.






## இரண்டே நாளில் போன்!

இங்கு போன் அப்ளை பண்ணினால் இரண்டே நாட்களில் பெறலாம். லோக்கல் கால்களுக்குக் கட்டணமில்லை - இலவசம்! பொது இடங்களில் உள்ள போன்களில் கார்டுகள் செலுத்திப் பேசலாம். ராங் கால் வருவதில்லை. குடும்பத்தினரைப் பிரிந்திருக்கும் நம்மவர்களுக்கு மிகப் பெரிய ஆறுதல் போன்தான். லோக்கல் போனில் பேஜர் சிஸ்டம் எனும் வசதி இருக்கிறது. இந்த பேஜரை எங்கு போனாலும் பின்னோடு எடுத்துப் போகலாம். யார் நமக்கு போன் பண்ணினாலும் அலாரம் ஒலிக்கும். பேசுபவர்களின் நம்பர் பளிச்சிடும். அந்த நபரை நாம் சௌகர்யப்படி தொடர்பு கொள்ளலாம்.

## ஒரு வரி அதிசயங்கள்!

●● 1960 வரை குவைத்தில் நம் நாட்டு ரூபாய்தான் புழக்கத்தில் இருந்து வந்தது!

●● இங்கு பவர்கட் என்கிற பிரச்னையேயில்லை. ஒரு செகண்ட் கூட கரண்ட் தடைபடுவதில்லை.

●● உணவுப் பொருட்களுக்கு 80% மானியம்! மோர், தயிர் உட்பட எல்லாமே சீல் வைத்த டின்களில் விற்பனை!

●● கொசு கிடையாது. நிஜம்தான், கிடையவே கிடையாது!

●● கப்பூஸ் எனும் ரொட்டியும், கம்மூஸ் எனப்படும் (கொத்துக்கடலை - எள் சேர்ந்தது) கலவையும் பிரபலமான உணவு.

●● நம்மூரின் புதிய படங்கள் உடனே உடனே கேஸட்டுகளாகக் கிடைக்கின்றன.

●● பத்திரிகை, சினிமா, வீடியோவுக்கு சென்சார் உண்டு. ஆனால் பிற அரபுநாடுகள் போல அத்தனை கடுமையில்லை. பத்திரிகைகள் மறுநாளே ஐந்து பங்கு அதிக விலையில் கிடைக்கின்றன.

●● காய்கறிகளும் பழங்களும் தினசரி விமானத்தில் பம்பாயிலிருந்து வந்து இறங்குகின்றன.

●● மக்கள் தொகை 15 லட்சம்தான்! இதில் இந்திய, இலங்கைத் தமிழர்கள் 75 ஆயிரம்!

●● பெட்ரோல் லிட்டர் 4 ரூபாய்! மினரல் வாட்டர் 10 ரூபாய்!

●● வெயில் நாட்களில் (ஜூன், செப்டம்பர்) விடியற்காலை 3½க்கே சூரியனைப் பார்க்கலாம்.

●● எதற்கும் வரி கிடையாது. கொலை, கொள்ளை, கற்பழிப்பு.. எதுவும் இல்லை.

●● பஸ்களில் டிரைவரே டிக்கெட் தருவார். கதவுகள் ஆட்டோமாடிக்!

●● வீட்டுக்கு வீடு தபால் பட்டுவாடா இல்லை. போஸ்ட்பாக்ஸ் எண் வைத்துக் கொண்டு அவரவர் போய் தபால் ஆபீஸிலிருந்து கடிதங்களை எடுத்துக் கொள்ள வேண்டும்.

●● முடிவெட்டுபவர்கள், தையல், சலவைக்காரர்களுக்கு ஏக டிமாண்ட்! முடிவெட்ட 'தலை'க்கு 100 ரூபாய்!

●● அரசு அலுவலர் என்றால் குறைந்தது 45 ஆயிரமும், தனியார் துறை எனில் 65 ஆயிரமும் சம்பளம் வாங்குபவர்கள் மட்டுமே சொந்த நாட்டிலிருந்து குடும்பத்தை அழைத்து வர இயலும்.

**- ஓ. எம். கண்ணன், பிரேமா, திருநாவுக்கரசு, ராஜகோபால், ரம்யா, முரளி, ஈஸ்வர், விசாலம், லதா ராஜேந்திரன், ராஜசேகரன்.**

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : வி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka